

# அம்புலிமாமா

ஜூன் 1995



## பொருளடக்கம்






தனிப்பிரதி ரூ. 5-00.

வருட சந்தா ரூ. 60-00.

அனைத்து புத்தக ஸ்டால்களிலும்
விற்பனைக்கு வந்துவிட்டது!

மேகலா
காமிக்ஸ்

ஒவ்வொரு மாதமும்
மேகலா காமிக்ஸ் வழங்கும்
**காரிகன்** துப்பறியும் முழு நீள சித்திரக்கதை
வரிசையில்....





ஜூன்
முதல் தேதி

# மாய விமானம்

மாதம் 5 ரூபாயில் அமெரிக்க சி.ஐ.டி.யோடு நீங்களும்
குற்றவாளிகளைக் கண்டுபிடியுங்கள்!

மேகலா
காமிக்ஸ்

**கோடை மலர்** விலை ரூ.15
விற்பனையாகிக் கொண்டிருக்கிறது!






சூப்பர் சி.ஐ.டி. சாயர் மற்றும் ஜானி தூள் பறத்துகிறார்கள்
ஒரே தொகுதியில் 4 சித்திரக்கதைகள்!

*மேகலா காமிக்ஸ் 96, காம்தார் நகர், சென்னை - 600 034.*

# அம்புலிமாமா




நிறுவனர் : 'சக்கரபாணி' நிர்வாக ஆசிரியர் : நாகிரெட்டி



## கரும்பலகை இயக்கத்திற்கும் அப்பால்!

பழங் கதைகளில் குருகுல வாசம் பற்றிப் படிக்கிறோம். சீடர்கள் குருவின் ஆசிரமத்தில் தங்கி அவர் சொல்வதைக் கேட்டு விஷயங்களைத் தெரிந்து கொண்டார்கள். இக் காலத்தைப் போல பாடத் திட்டங்கள் என்றோ புத்தகங்கள் என்றோ இருக்கவில்லை. குருதான் படிப்பின் காலத்தை வரையறுத்து படிப்பு முடிந்ததைக் கூறி சீடனை அனுப்புவார். சீடர்கள் அமர்வதும் மரத் தடியில்தான்.

மக்கள் அப்போதிருந்து இன்று வரை குருகுல வாசப் படிப்பைப் புகழ்ந்து கொண்டே இருக்கிறார்கள். ஆனால் நகரப் பள்ளிகள் இப்படி இல்லை. இப்போது கிராமங்களில்தான் கட்டடமோ, மேஜை நாற்காலி, பெஞ்ச், கரும்பலகை இல்லாமல் மரங்களின் கீழ் வகுப்புகள் நடத்தப்படுவதைக் காணலாம். ஆசிரியர்களும் மாணவர்களும் அங்கு வசிப்பதில்லை. எங்கிருந்தோ வந்து போவார்கள்.

அதிகாரிகள் கிராமப் பள்ளிகளை நகரப் பள்ளிகள் போலாக்க 'கரும்பலகை இயக்கம்' என ஆரம்பித்துள்ளனர். இரண்டு வகுப்பறைகளையும் இரு ஆசிரியர்களையும் கரும்பலகையும் கொண்டு இப்பள்ளிகள் நடத்தப்படும். குடி நீர், கழிப்பறை போன்ற வசதிகளும் செய்து கொடுக்கப்படும்.

பணம் நிறைய செலவு செய்தும் இதற்குச் சரியான திட்டம் வகுக்கப்படவில்லை. மரத்தடியேதான் பல கிராமங்களில் வகுப்புகள் நடத்தப்படுகின்றன. கரும்பலகையும் இருப்பதில்லை. எனவேதான் குருகுல முறை பற்றி எல்லோரும் யோசிக்கிறார்கள். இப்போது கிராமங்கள் உள்ள நிலையில் இது முடியுமா என்பது சிந்திக்க வேண்டிய விஷயம்.



மதிமுகம் : 96 ஜுன் 1995 புன்னகை : 6

தனிப்பிரதி : ரூ. 5.00 வருட சந்தா : ரூ. 60.00



# REWARD!




BRING 10 DIFFERENT WRAPPER STORIES AND THEIR WRAPPERS TO GET 3 MONOPACKS FREE

Big Babol

SOFT NON STICKY BUBBLE GUM

HURRY KIDS!

McCann/PERFETTI/ 995

- Look out for wrapper stories inside Big Baból monopacks only
- Collect the reward from your nearest dealer
- Offer available in select cities

PERFETTI

செய்திகளும் தகவல்களும்:

# அயர்லாந்தில் அமைதிகாக்க!

அயர்லாந்து மக்களுக்கு செண்ட் பியாட்ரிக்ஸ் தினம் மிக முக்கியமானது. கி.மு. 4வது நூற்றாண்டில் அது செல்டிக் குடியேற்ற நாடாக இருந்தது. அதன்பின் 900 வருடங்களில் அங்கு கிருஸ்துவ மதம் பரவியது. இங்கிலாந்தில் பிறந்து கடற் கொள்ளையரிடம் அகப்பட்ட பியாட்ரிக்ஸ் மெதுவாக கிருஸ்துவ மத போதகராகப் பயிற்சி பெற்று சுமார் கி.பி. 450ல் அயர்லாந்தை வந்தடைந்தார். அங்கு அவர் கிருஸ்துவ மதத்தைப் பரப்பலானார். அயர்லாந்து மக்கள் அவரை பக்தி சிரத்தையுடன் மதித்து மார்ச் 17 தேதியை அவர்கள் அவரது நினைவாகக் கொண்டாடுகிறார்கள்.

இந்த ஆண்டு மார்ச் 17ல் அமெரிக்காவில் வாஷிங்க்டனிலுள்ள 'வெள்ளை மாளிகை'யில் இரு ஐரிஷ் தலைவர்களை கௌரவிக்க ஏற்பாடு செய்யப்பட்டது. அவர்கள் ஐரிஷ் பிரதமர் ஜான் ப்ரூடஸும், சின்ஃபின் தலைவர் ஜெர்ரி ஆடம்ஸும் ஆவர். கடந்த 25 ஆண்டுகளாக பிரிட்டிஷாரை எதிர்த்துப் போராடும் ஐரிஷ் தேசியப் படையின் அரசியல் பிரதிநிதியாக ஜெர்ரி ஆடம்ஸ் கருதப்படுகிறார். அவரை அமெரிக்கா அழைத்ததை பிரிட்டன் விரும்பவில்லை. ஆனால் ஐரிஷ் தேசியப் படை போர் நிறுத்தம் செய்து சமாதானப் பேச்சு வார்த்தைகளில் இறங்கி இருப்பதால் ஜெர்ரியை அழைத்ததில் தவறு எதுவும் இல்லை என அமெரிக்கா கருதுகிறது.

யுனைடட் கிங்டம் என இங்கிலாந்து, ஸ்காட்லாந்து, வேல்ஸ், அயர்லாந்து ஆகியவை சேர்ந்து இருந்தன. அயர்லாண்ட் வட, தென் அயர்லாந்துகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. பிரிட்டிஷாரின் ஆதீனத்தில் இருந்த அயர்லாந்தில் 1916ல் கலகம் ஏற்பட்டு 1921ல் அயர்லாந்தின் தென்பகுதி 'ஐரிஸ் ஃப்ரீஸ்டேட்' என்ற பெயரில் தனியாக விடுதலை பெற்றது.

அது 1949ல் பிரிட்டிஷ் காமன் வெல்த்திலிருந்தும் வெளியேறி அயர்லாந்து குடியரசு என்றாகியது. 1916 கலகத்தில் ஈடுபட்டுச் சிறைப்பட்ட ஈமன் டிவேலரா சின்ஃபின் தேசியக் கட்சியின் தலைவரானார். அவர் 1917ல் பிரிட்டனுடன் சமாதானமாகப் போக முயன்றும் அம்முயற்சியில் வெற்றி பெறவில்லை. அவர் 1932ல் நாட்டின் பிரதமராகி, பிறகு 1959ல் குடியரசுத் தலைவராகவும் ஆனார்.

வட அயர்லாந்தில் பிராடஸ்டண்டுகள் அதிகம். கத்தாலிகர்கள் சிறுபான்மையினர். பிராடஸ்டண்டுகள் பிரிட்டிஷாருடன் சேர, கத்தோலிகர்கள் தென் அயர்லாந்துடன் வட அயர்லாந்தைச் சேர்க்க விரும்பினர். 1969ல் இருதரப்பினரிடையே போர் மூண்டது. அயர்லாந்து தேசியப் படையுடன் பிரிட்டிஷ் படை மோதலாயிற்று. இந்தப் போர் 25 ஆண்டுகளுக்கு நடந்தது. இதில் 3000 பேர்களுக்கு மேல் இறந்தனர். 1994ல் ஐரிஷ் தேசியப் படை ஆகஸ்டில் போர் நிறுத்தம் செய்தது. அப்போதிருந்து பேச்சு வார்த்தைகளால் அது முடிவுகாண முயன்று வருகிறது.

அமெரிக்கா முன்பு ஸின்ஃபெனைப் பயங்கரவாதிகளெனக் கருதி வந்தது. ஆனால் ஐரிஷ் தேசியப் படை போர் நிறுத்தத்தை அறிவித்துப் பேச்சு வார்த்தைகளில் இறங்கியதும் அமெரிக்கா தன் கருத்தை மாற்றிக் கொண்டது. அது அயர்லாந்திற்கும் இங்கிலாந்திற்கும் சமாதானம் செய்து வைக்க முயல்கிறது. அதற்காகவே அமெரிக்க அதிபர் பில் கிளின்டன் முயல்கிறார். எனவே அவர் அயர்லாந்து கொண்டாடும் மார்ச் 17 அன்று அயர்லாந்தின் இரு தலைவர்களைத் தம் மாளிகைக்கு அழைத்து கௌரவித்தது அமைதி முயற்சியில் ஒரு அடி வைப்பது போலத்தானே!



# வீண் பேச்சல்ல

நவமணியும் ஞானமணியும் ஒரே குருகுலத்தில் படித்துக் கொண்டிருந்தார்கள். அவர்களது படிப்பு முடிந்ததும் அவர்களது குரு நவமணியை வியாபாரத் துறையையும் ஞானமணியை இலக்கியத் துறையையும் தேர்ந்தெடுத்து வாழ்க்கையில் முன்னேற ஆசிகள் அளித்தார்.

குரு கூறியபடியே ஞானமணி தன் ஊருக்குப் போய் எல்லா நூல்களையும் ஆழ்ந்து படிக்கலானான். நவமணி தலைநகருக்குப் போய் வியாபாரத்தில் ஈடுபட்டான். கொஞ்ச காலத்திற்குள் அவன் லட்ச லட்சமாகப் பொருள் சேர்த்து விட்டான். அவனிடம் நிறையப் பணம் இருந்ததால் அவனைச் சுற்றிப் பலர் இருந்தனர். அவர்கள் அவன் சக்திக்கு முன் யாருமே நிற்க முடியாது என்றெல்லாம் புகழ்ந்து கொண்டே இருந்தார்கள்.

ஒருநாள் நவமணியின் வீட்டிற்கு ஒரு சாது வந்தார். அவர் நவமணி அளித்த உணவை உண்டபின் "உனக்கு என்ன வேண்டுமோ கேள் கொடுக்கிறேன்" என்றார். நவமணியோ அலட்சியமாகச் சிரித்து "எனக்கு நீங்கள் கொடுப்பதா? என் சக்தி எவ்வளவு என்று தெரியுமா? உங்களுக்கு என்ன வேண்டுமோ, கேளுங்கள். நான் கொடுக்கிறேன்" என்று இறுமாப்புடன் கூறினான்.

சாதுவும் "நீ அஞ்ஞானி. அதனால் நீ உன் சக்தி இவ்வளவுதான் என்று தெரிந்து கொள்ளாமல் ஏதோ சொல்லிவிட்டாய். நான் விரும்பியதை உன்னால் கொடுக்க முடியாதே. ஏன்? இதை உலகில் யாராலும் கொடுக்க முடியாதுதான்" என்றார்.

நவமணிக்குக் கோபம் வந்து விட்டது. ஆனாலும் அதை அடக்கிக் கொண்டு "வீண் வார்த்தை கூறாதவர்

-திருச்சி சங்கரன்-

யாரென்று கூறுங்கள். அவரிடம் போய் நல்லறிவு பெற்று வருகிறேன்" என்றான். சாதுவும் "நீ சக்கரபுரத்திற்குப் போ. அங்கு ஞானமணி என்ற பேரறிஞர் இருக்கிறார். அவரிடமிருந்து நல்லறிவு பெற்றுக் கொள்" என்று கூறிவிட்டுப் போனார்.

ஞானமணி என்ற பெயரைக் கேட்டதும் நவமணி திடுக்கிட்டான். ஒருவேளை அவன் தன்னோடு குருகுலத்தில் படித்த ஞானமணி தானோ என்ற சந்தேகம் அவன் மனதில் எழுந்தது. இதுவரை நவமணி குருகுலத்தில் படித்த எல்லோரையும் விடத் தானே பெரிய மனிதனாகி விட்டதாக எண்ணி இருந்தான். ஆனால் சாது ஞானமணி மிக்க அறிவு பெற்றவன் எனக் கூறி அவனைத் தன்னைவிட உயர்ந்தவன் எனக் கூறி விட்டாரே என்று மனம் புழுங்கி அவன் மீது பொறாமையும் கொண்டான்.

தவமணி உடனேயே சக்கரபுரத்திற்கு மிகுந்த ஆர்ப்பாட்டத்துடன் போனான். பத்து வேலையாட்கள் கூடி முத்துப் பல்லக்கில் அமர்ந்து அவன் சக்கரபுரத்தை அடைந்தான். அது பெரிய ஊர். அங்கு பலரிடம் ஞானமணியின் வீடு எங்கே உள்ளது என்று விசாரித்தும் யாராலும் சரியாகச் சொல்ல முடியவில்லை.

முடிவில் ஒருவனிடம் கேட்ட போது அவன்தான் ஞானமணியின் சீடன் எனக் கூறி நவமணியையும்



அவனோடு வந்தவர்களையும் ஞானமணியின் வீட்டிற்கு அழைத்துச் சென்றான். ஞானமணியின் வீடு சிறிய ஓட்டு வீடாயினும் மிகவும் சுத்தமாகவும் பார்க்க அழகாகவும் இருந்தது.

அதைக்கண்ட நவமணி "பூ! இவன் வீடு இவ்வளவு சிறியதா? எனக்குள்ள மூன்று ஏழுடுக்கு மாளிகைகளுக்கு முன் இது எம்மாத்திரம்? இவனா என்னைவிட மேலானவன்? எனக்கு அறிவு புகட்டப் போகிறவன்?" என்றெல்லாம் எண்ணினான்.

நவமணி அந்த வீட்டிற்குப் போன போது ஞானமணி வெளியூருக்குப் போயிருந்தான். ஞானமணியின் மனைவி நவமணியையும் அவனது ஆட்களையும் வரவேற்று உபசரித்து



லுங்கள். எல்லாவற்றையும் நான் தீர்க்கிறேன்" என்றான்.

சீடர்களோ "அந்த விவரமெல்லாம் எங்களுக்குத் தெரியாது. அவர் வந்த பிறகு அவரிடமே கேளுங்கள்" என்றனர். ஞானமணி மறுநாள்தான் வந்தான். அவன் பண்டிதர்கள் கூட்டம் ஒன்றிற்குப் போயிருந்தானாம். அவன் நவமணியைக் கண்டு மகிழ்ந்து நலம் விசாரித்தான். அவன் பெரும் பணக்காரனாக இருக்கிறான் எனக் கேட்டு சந்தோஷப்பட்டான்.

நவமணியோ "நான் மட்டும் பணக்காரனாகி விட்டதில் எனக்கு மகிழ்ச்சி இல்லை. நீயும் என்னைப் போல பெரும் பணக்காரனாக வேண்டும். நீ இப்படி வசதி இல்லாமல் வாழ்வது எனக்குச் சற்றும் பிடிக்கவில்லை. இங்கு எங்கோ ஒரு மூலையில் கேட்பாரற்றுக் கிடக்கிறாயே. இவ்வளவு சிறிய வீட்டில் இருக்கிறாய். உன் மனைவியின் கழுத்திலும் கைகளிலும் எந்த நகையும் இல்லை. இந்த நிலையில் நான்கு சீடர்களை வேறு வீட்டில் வைத்துக் கொண்டு சாப்பாடு வேறு போடுகிறாய். உனக்குக் கொஞ்சமாவது அறிவிருக்கிறதா? நான் சொல்வதைக் கேள். பேசாமல் என்னோடு கிளம்பி வந்து என் வீட்டில் இரு. உனக்கு வியாபாரம் செய்யக் கற்றுக் கொடுக்கிறேன்" என்றான்.

நவமணி அப்படியொன்றும் ஞானமணி மீது இரக்கப்பட்டுக் கூறி விடவில்லை. தன் பெருமையைக்

விருந்து சாப்பாடும் போட்டாள். ஞானமணியின் நான்கு சீடர்கள் அங்கேயே இருந்து கல்வி பயின்று வந்தார்கள். அவர்களிடம் நவமணி பேச்சுக் கொடுத்து ஞானமணியிடம் பணம் ஒன்றும் அதிகமில்லை என்று தெரிந்து கொண்டான்.

நவமணியும் "உங்கள் குரு என் நண்பன் அவரைக் காணவே வந்தேன். அவர் இப்படி வருவோர் போவோர்க்கெல்லாம் உணவு அளித்துக் கொண்டிருந்தால் கடனாளியாக ஆக வேண்டியதுதான். என் நண்பர் கடன் வாங்கிப் பிழைப்பதை நான் பொறுத்துக் கொள்ளமாட்டேன். அவர் யாராரிடம் எவ்வளவு கடன் வாங்கி இருக்கிறார் என்பதைச் சொல்

காட்டிக் கொள்ளவே அவ்வாறு சொன்னான். ஞானமணியோ "நான் இந்த ஊரைவிட்டுப் போவதானால் முதலில் என் கடன்களை எல்லாம் தீர்க்க வேண்டும் கடன்காரர்கள் என்னைப் போகவிட மாட்டார்களே" என்றான்.

அந்தக் கடன்காரர்களை எல்லாம் அழைத்து வரும்படி நவமணி கூறவே சீடர்களும் அவர்களை எல் லாம் கூட்டி வந்தார்கள். அவர்கள் ஐந்து பேர்களே. ஒருவன் வட்டிக் கடைக்காரன். இன்னொருவன் மளி கைக் கடைக்காரன். மூன்றாவதவன் ஞானமணியின் வீட்டைக் கட்டிக் கொடுத்தவன். நான்காவது பேர்வழி எழுதப் பனை ஓலை விற்பவன். ஐந்தாவதவன் வண்டி ஓட்டுபவன்.

நவமணி அவர்களிடம் "உங்கள் கடன் பாக்கிகளை எல்லாம் நான் தீர்க்கிறேன். இவரை நான் அழைத் துப் போக அனுமதியுங்கள்" என் றான். அவர்களோ "ஐயா! இவர் என்றாவது எங்களுக்குக் கொடுக்க வேண்டிய பணத்தைக் கொடுத்து விடுவார் என்று நம்பிக்கை எங் களுக்கு உள்ளது. இவர் கேட்டால் மேலும் கடன் கொடுக்கவும் தயார். எனவே இவர் இங்கேயே இருக்கட் டும்" என்றார்கள். நவமணியோ தானே ஞானமணியின் கடன் பாக்கி களைக் கொடுத்துவிட்டுப் போவதா கக் கூறவே அவர்கள் "நாங்கள் இவ ரிடம் எங்கள் பாக்கியைக் கொடுத்து விடும்படி நெருக்கவில்லையே. அவ ருக்கு பதிலாக யாரோ கொடுக்கும்





பணமும் எங்களுக்கு வேண்டாம்" என்று கூறிவிட்டார்கள்.

அப்போது ஞானமணி "இது என் நண்பனுக்கு நான் வைத்த பரீட்சை" என்றான். அதுகேட்டு நவமணி "நீ எனக்குப் பரீட்சை வைத்தாயா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டான்.

ஞானமணியும் "ஆமாம். நீ முதல் தடவையாக என் வீட்டிற்கு வந்தாய். உனக்கு என்மீது அன்பிருக்கிறது என்பது தெரிந்தால்தானே நான் உனக்கு நீ கேட்பதைக் கொடுக்க முடியும்?" என்றான். நவமணி மேலும் வியப்படைந்து "நீயா நான் கேடபதைக் கொடுக்கப் போகிறாய்? நன்றாக யோசித்துப் பேசு" என்றான்.

ஞானமணியும் "நான் யோசியாமல் எதையும் கூறமாட்டேன். எனவே நீ தாராளமாக எதை வேண்டுமானலும் கேட்கலாம்" என்றான். நவமணி ஞானமணியை இக்கட்டில் எப்படி மாட்டிவிடலாம் என்று யோசித்து "இப்போது வியாபாரத்தில் எனக்கு நஷ்டம் ஏற்பட்டுள்ளது. இப்போது எனக்கு இருபது லட்சம் வராகன்கள் வேண்டும். இந்தத் தொகையைக் கொடு பார்க்கலாம்" என்றான்.

அதுகேட்டு அங்கிருந்தோர் திகைத்துப் போனார்கள். ஞான மணியோ "சரி. நான் உன்னிடம் தனி மையில் பேச வேண்டும். உள்ளே வா" என்றான். நவமணியும் "தனிமை எதற்கு? சொல்வதை எல்லோர் முன்னிலையிலும் சொல். நீயோ பெரிய அறிவாளி. சொன்ன சொல் தவறாதவன். எனவே தயக்கம் என்ன? தாரளமாகச் சொல்" என்று முரண்டு பிடித்தான்.

ஞானமணி பல முறை வேண்டியும் நவமணி கேளாமற் போகவே அதைக் கண்ட சீடர்கள் "குருவே! உங்கள் வாக்கைக் காக்க நாங்கள் அந்தப் பணத்திற்கு ஏற்பாடு செய்ய லாமா? உங்களுக்குத் தலைக்குனிவு ஏற்பட நாங்கள் விடமாட்டோம்" என்றார்கள்.

நவமணியோ "சோற்றுக்கு வீங்கிக் கிடக்கும் நீங்களா எனக்கு இருபது லட்சம் வராகன்கள் கொண்டு வந்து கொடுக்கப் போகிறீர்கள்?" என்று கேட்டான் ஏளனமாக. அதற்கு ஞான

மணி "அவர்கள் ஒன்றும் சோற்றுக்கு இல்லாதவர்கள் அல்ல. கோடீஸ் வரர்களின் புதல்வர்கள். அறிவைப் பெருக்கிக் கொள்ள என் சீடர்களாக ஆகி இருக்கிறார்கள். பணம் ஒரு வனுக்கு இல்லாத மதிப்பைக் கொடுத்து விடுகிறது. இப்படி நானும் ஆகிவிடக் கூடாது என்றே நானும் என் சீடர்களும் என் வருமானத்தை யும் அவர்களது செல்வ நிலையையும் மறைத்து வைத்தோம். நான் பண்டித சபைகளுக்குப் போய் பல மன்னர் கள் பரிசளித்த நவரத்தினங்களையும் தோடாக்களையும் ஏராளமாக வைத் திருக்கிறேன். நான் இவற்றை எல் லாம் கொண்டிருந்தும் எளிமையா கவே வாழ்ந்து வருகிறேன். இதைப் பறைசாற்ற வேண்டாமென்றுதான் உன்னிடம் தனிமையில் பேச நினைத் தேன். ஆனால் இப்போது எல்லோ ரும் அறியக் கூறும்படி நீ செய்து விட்டாய்" எனக்கூறி உள்ளே போய் ஒரு வைரக் கல்லை எடுத்து வந்து நவமணியிடம் கொடுத்தான்.

நவமணி அந்த வைரத்தைப் பார்த்து மலைத்துப் போனான். அவன் ஞானமணியிடம் "நீ சொல் வது வெட்டிப் பேச்சு என எல்லோ ருக்கும் நிரூபிக்க நினைத்தேன். ஆனால் நான்தான் அப்படிப்பட்ட வன் என்று தெரிந்த கொண்டேன். 'பண்டிதர்கள் அடக்கமுடன் இருப் பார்கள். தம்மிடம் உள்ளதை வெளிக் காட்டிக் கொள்ளமாட்டார்கள்' என்று பேரறிஞர்கள் கூறி இருக்கிறார்கள். இதை உணராமல் உன்னைச் சிறு மைப்படுத்தி என் பகட்டை வெளிக் காட்ட நினைத்தேன். என்னை மன் னித்து நல்லறிவு புகட்டி அனுப்பு" எனக் கண்ணீர் மல்கக் கூறி நின்றான்.

ஞானமணியும் அவனைச் சில நாட்கள் தன்னோடு இருக்கச் சொல்லி உபநிஷத்துக்களைக் கூறி அவனிடம் இருந்த அகங்காரத்தைப் போக்கி னான். நவமணியும் அதன்பிறகு படா டோபத்தைவிட்டு எளிய வாழ்க்கை வாழ்ந்து எல்லோரிடமும் பணிவுடன் நடந்து வரலானான்.



# அவளையும் மிஞ்சி விட்டாள்!

வேம்பூரில் ஜெயம்மா என்ற பணக்காரி இருந்தாள். அவளது கஞ்சத் தனத்தை ஊரே அறியும். ஆனால் அவள் தான் கருமி இல்லை என்றும் சிக்கனமாக வாழ் பவள் என்றும் எல்லோரிடமும் கூறி வந்தாள். அவளுடைய ஒரே மகன் கோதண் டம். அவனுக்குக் கல்யாணம் செய்து வைக்க அவள் முயன்றாள்.

ஜெயம்மா எப்படி இருந்தால் என்ன, பெரும் பணக்காரி ஆயிற்றே என்று எண்ணிப் பலர் கோதண்டத்திற்கு பெண்ணைக் கொடுக்க முன் வந்தனர். அவர் களிடம் ஜெயம்மா அவர்களது பெண்களுக்கு ஒரு பரீட்சை வைத்துத் தேர்ந்தெடுப்பதாகக் கூறினாள். அப்பரீட்சையில் எல்லாப் பெண்களுமே தோற்றுப் போனார்கள்.

பக்கத்து ஊர் ஒன்றில் நல்ல பெண் இருப்பதாக கேள்விப்பட்டு ஜெயம்மா அவளது வீட்டிற்குச் சென்றாள். அங்கேயே சாப்பிட்டு விட்டு அவள் அப்பெண்ணிடம் "ருக்மிணி என்ற பெயர் உனக்கு நன்றாக உள்ளது. நீ போய் சாப்பிட்டுவிட்டு வா. உன்னிடம் சில கேள்விகளைக் கேட்க வேண்டும்" என்றாள்.

ருக்மிணியும் "எங்கள் வீட்டில் ஒரு விதத்தில் ஏற்படும் செலவை மற்றொரு விதத்தில் சரிக் கட்டுவோம். அதனால் இன்று நான் சாப்பிட மாட்டேன்" என்றாள். அது கேட்டு ஜெயம்மா மகிழ்ந்துபோய் "பேஷ். சிக்கனத்தில் நீ என்னையும் மிஞ்சி விட்டாய். நீ தான் என் மருமகள்" என்றாள்.






# 8

*(புவன சுந்தரியின் காரணமாக கிரேக்கர்களுக்கும் ட்ரோஜன்களுக்கும் நடந்த போரில் இரு தரப்பிலும் பல வீரர்கள் இறந்தனர். கிரேக்க வீரர்களில் இறந்த வஜ்ஜிரகாயனும் பூதவனும் முக்கியமானவர்கள். ட்ரோஜன்களில் இறந்த வீரர்களில் முக்கியமானவர்கள் வீரசிம்மனும் மோகனனும் ஆவர். மோகனன் இறந்ததும் புவனசுந்தரியை அவளது விருப்பத்திற்கு மாறாக அரிபயங்கரன் மணந்து கொண்டான். ட்ராய் நகர வீழ்ச்சிக்காக ரூபதரனுக்கு புவனசுந்தரியும் அவளது மாமியாரும் உதவினர். அதன் பிறகு—)*

ட்ராயின் வீழ்ச்சிக்கு சில மாதங்களுக்கு முன்பிருந்தே வர்த்தனனின் புதல்வர்களிடையே சச்சரவுகள் மூண்டன. அதுகண்டு வர்த்தனன் கிரேக்கர்களுடன் ரகசியமாக சமாதானப் பேச்சுகளை நடத்த முயன்றான். அவன் தன் மைத்துனனை ராஜராஜனிடம் தூது அனுப்பினான். இவனுக்கு அரிபயங்கரன் என்றாலே சற்றும் பிடிக்காது. எனவே இந்த சாக்கில் அவன் ரூபதரனுடன் சேர்ந்து ஒரு சதித்திட்டம் போட்டான்.

ட்ராயின் பாதி செல்வத்தைத் தனக்குக் கொடுத்தால் ட்ராய் நகரை ரூபதரனிடம் ஒப்படைப்பதாக அவன் கூறினான். இதற்குப் பிரசம்ஸன் உதவுவான் என்றும் வர்த்தனனின் மைத்துனன் ரூபதரனிடம் கூறினான்.

ட்ராய் நகருள்ளும் கிரேக்கர்




களுக்கு உதவ ஒரு சிலர் இருந்தனர். அந்நகரிலிருந்து அறிவு தேவதை விக்கிரகம் திருடப்பட்டது ட்ராய்க்குக் கேட்டின் அறிகுறி எனப் பேசலாயினர். இனி கிரேக்கர்கள் ட்ராய் நகருக்குள் எந்த நிமிடமும் வந்து விடலாம் என எதிர்பார்க்கலாயினர். கிரேக்கர்களும் இதற்காக ஒரு பெரிய மரக் குதிரையைத் தயாரித்து அதில் "தங்களது திரும்பிச் செல்லும் பயணத்தில் கிரேக்கர்களுக்கு அருள் புரிய அறிவு தேவதையை வேண்டி அதற்குச் சமர்ப்பிக்கும் காணிக்கை" என்றும் எழுத்துக்களைச் செதுக்கி வைத்தனர்.

அக்குதிரைக்குள் வீரர்கள் ஒளிந்து கொள்ள வேண்டும் என்று ரூபதரன் கூறவே பிரதாபன், தேவமயன் போன்ற முப்பது வீரர்கள் அதனுள் சென்றனர். எல்லோரும் குதிரைக்குள் சென்றபின் மேல்பக்கத்திலுள்ள கதவு மூடிப்பூட்டப்பட்டது.

இதன்பிறகு எல்லாம் ரூபதரனின் திட்டப்படி நடந்தன. அன்று இருட்டும் போது கிரேக்கர்கள் தம் கூடாரங்களுக்குத் தீயை மூட்டினார்கள். அதன்பின் அவர்கள் கப்பல்களில் ஏறி ட்ராய் நகரை விட்டுக் கிளம்பிச் சென்றார்கள். மரக் குதிரை ட்ராய் கடற்கரையில் வைக்கப்பட்டே இருந்தது. பத்து ஆண்டுகளாகப் போர் நடத்தி கிரேக்கர்கள் அலுத்துப் போய்த் தம் நாட்டிற்குத் திரும்பிச் செல்கிறார்கள் என ட்ராய் நகரத்தவர் எண்ணினார்கள். ஆனால் கிரேக்கர்களோ கடலில் கொஞ்ச தூரம் போய் ஒரு தீவில் தங்கிவிட்டு தக்க சமயத்தில் ட்ராய் நகருக்குள் நுழையத் திட்டம் போட்டிருந்தார்கள்.

மறுநாள் காலை ட்ராய் நகர மக்கள் கிரேக்க முகாம்கள் எரிந்து கிடப்பதையும் கடலில் கிரேக்கக் கப்பல்களோ வீரர்களோ இல்லாது இருப்பதையும் கண்டார்கள். அதை விட அவர்களை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது கடற்கரையில் வைக்கப்பட்டிருந்த பெரிய மரக் குதிரைதான். ட்ராய் நகர மக்கள் மகிழ்ந்து கூட்டம் கூட்டமாக வந்து அந்த அதிசய மரக் குதிரையைப் பார்க்கலானார்கள்.

வர்த்தனனும் தன் புதல்வர்களோடு கடற்கரைக்கு வந்து அக்குதிரையைப் பார்த்தான். அது அறிவு தேவதைக்கு காணிக்கை என அதன் மீது எழுதப்பட்டிருந்ததால் அதை நகருக்குள் கொண்டு போய் ஆலயத்தில் சேர்த்துவிடலாம் என்று கூறினான். அதனால் பெரிய சக்கர வண்டியில் அக்குதிரையை ஏற்றி இழுத்துக்கொண்டு கோட்டைத் தலைவாசலுக்குச் சென்றார்கள்.

மரக் குதிரை மிகப் பெரியதாக இருந்ததால் அது தலைவாசலுக்குள் போக முடியவில்லை. அதனால் கோட்டை மதிலை இடித்து வழியை அகலப்படுத்தி நகருக்குள் குதிரையை இழுத்துச் சென்றனர். அதன்பின் இடித்த மதில் சுவரை உடனேயே கட்டியும் விட்டார்கள்.

ஊருக்குள் மரக் குதிரை வந்து விட்ட பிறகும் வாதப் பிரதிவாதங்கள் நிற்கவில்லை. வர்த்தனனின் மகள் ஜாலினி என்பவளுக்கு திவ்விய திருஷ்டி உண்டு. அவள் அக்குதிரையை பார்த்துவிட்டு "இதற்குள் வீரர்கள் ஆயுதங்களோடு இருக்கிறார்கள்" என்று கூறினாள். தீக்ஷண திருஷ்டி என்பவனும் ஜாலினி கூறுவது சரியே என்று கூறி தன் ஈட்டியையும் அக்குதிரை மீது விட்டெறிந்தான். அது குதிரையின் வயிற்றில் குத்தி 'டங்' என்று உலோக ஒலியை எழுப்பியது.

அதுகேட்டு அக்குதிரையைச் சுற்றி நின்றவர்கள் "இதனை எரித்து இதன் சாம்பலைக் கோட்டைக்கு வெளியே



கொண்டு போய்க் கொட்டி விட லாமே" என்று கூவினார்கள். ஆனால் வர்த்தனனை ஆதரித்தவர்களோ குதிரையை ஒன்றும் செய்யக்கூடாது எனக் கூறினார்கள். இப்படியாக வாக்குவாதம் தொடர்ந்து நடக்கலா யிற்று.




அப்போது ட்ரோஜன் வீரர்கள் இருவர் ஒரு கிரேக்க வீரனைப் பிடித்து இழுத்து வந்தனர். அவன் சௌரியநாதன். அவனது கை கால் களில் விலங்குகள் மாட்டப்பட்டிருந் தன. ட்ரோஜன்கள் அவனைப் பல கேள்விகள் கேட்டு துளைக்கலாயினர். ரூபதரனிடம் அவன் நன்கு பயிற்சி பெற்றவனாதலால் அவர்கள் கேட்ட கேள்விகளுக்கு எல்லாம்' டக்டக்' என்று பதில் கூறி தான் சொன்னதை எல்லோரையும் நம்ப வைத்தான்.

"பிரபோதரன் கொலை செய்யப் பட்ட ரகசியம். எனக்குத் தெரியும். ரூபதரனுக்கு என்மீது கடுமையான கோபம். ஏனெனில் நான் அவன் ரகசியத்தை அறிந்து கொண்டு விட் டேனாம். கிரேக்கர்களுக்கு இந்தப் போரால் எப்போதோ அலுப்பு தட்டி விட்டது. அவர்கள் தாயகம் செல்லத் துடித்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் கப்பல்கள் செல்லக் காற்று தான் அவர்களுக்கு அனுகூலமாக வீசவில்லை. அதற்காகத்தான் இவ் வளவு நாட்கள் காத்திருந்தார்கள். இங்கு வர அவர்கள் கிளம்பிய போதும் காற்று அனுகூலமாக வீச வில்லை. அதனால் வாயு தேவனைப் திருப்திப்படுத்தி பல பலிகளைக் கொடுத்தார்கள்" என்று அவன் கூறி மேலும் தொடர்ந்தான்.

"ரூபதரன் காம்சுகனைப் பிடித்து இழுத்து 'யாரை பலியிட வேண்டு மென்று சொல்' எனக் கேட்டான். அவனும் பத்து நாட்களில் அதைக் கூறுவதாகச் சொன்னான். ரூபதரன் இந்தப் பத்து நாட்களுக்குள் காம் சுகனுக்கு லஞ்சம் கொடுத்து தான் விரும்பியதைக் கூறும்படிச் சொல்ல வைப்பான் என்பதே என் ஊகம். பத்தாவது நாள் காம்சுகன் சபைக்கு வந்து என்னைச் சுட்டிக் காட்டி னான். உடனே என்னை சங்கிலியால் பிணைத்தார்கள். என்னை பலியிடப்

போகு முன் காற்று அனுகூலமாக வீசத் தொடங்கவே எல்லோரும் என்னை விட்டு விட்டு கப்பலில் செல்ல ஏற்பாடுகளைச் செய்வதில் முனைந்தார்கள். நான் அந்த சந்தர்ப் பத்தைப் பயன்படுத்திக் கொண்டு அவர்களிடமிருந்து தப்பி ஓடினேன்" என்று செளரியநாதன் கூறினான்.

வர்த்தனன் அவன் கூறியதை அப் படியே நம்பினான். பிறகு அவன் "அதுசரி. இந்த மரக் குதிரையை ஏன் செய்து வைத்தார்கள்?" என்று கேட்டான். அவனும் "அறிவு தேவதை எங்களுக்கு உதவியாக இருந்தது உண்மையே. ஆனால் ரூபதரனும் தேவமயனும் உங்கள் நகரிலிருந்த அதன் சிலையைக் கவர்ந்து வந்து எங்கள் கூடாரத்தில் வைத்ததும் அதிலிருந்து மூன்று தீப்பொறிகள் கிளம்பின. விக்கிரகத்தின் கால்கள் வியர்வையால் நனைந்து போயின. தேவிக்குக் கோபம் வந்து விட்டது என்று நன்கு தெரிந்து போயிற்று. அதுகண்டு காம்சுகன் 'இனி நாம் தேவிக்கு ஏதாவது அற்புதக் காணிக்கை ஒன்றை சமர்ப்பித்து விட்டுப் போய் விடுவோம். இன் னொரு தடவை நல்ல முகூர்த்தமாகப் பார்த்துக் கொண்டு மறுபடியும் போருக்கு வருவோம்' என்று ராஜ ராஜனிடம் கூறினான். அதன் பயனா கத்தான் இவ்வளவு பெரிய மரக் குதிரை தயாரிக்கப்பட்டது" என்றான்.

வர்த்தனனும் "ஆனாலும் இவ் வளவு பெரிய மரக் குதிரையைச் செய்திருக்க வேண்டாமே" என்றான்.



அதற்கு சௌரியநாதன் "நீங்கள் இதனை நகருக்குள் இழுத்துப் போய் அறிவு தேவதைக்கு அர்ப்பணம் செய்து விடக் கூடாது என்ற நோக்கத்தில்தான் இவ்வளவு பெரிய குதிரையைச் செய்தார்கள். உங்களால் இதை நகருக்குள் இழுத்துச் செல்ல முடியாது என்று அவர்கள் நினைத்து விட்டார்கள். ஆனால் தேவிக்கு அர்ப்பணிக்க நீங்கள் இதனை நகருக்குள் சிரமப்பட்டு இழுத்து வந்து விட்டீர்கள். இனி உங்களுக்குத்தான் வெற்றி" எனக் கூறினான்.

தீக்ஷ்ணதிருஷ்டியோ "இவன் சொல்வதை நம்பாதீர்கள். எல்லாம் கட்டுக்கதை. ரூபதரன் சொல்லச் சொன்னதை இவன் கிளிப்பிள்ளை போல அப்படியே ஒப்பித்திருக்கிறான்" என்று கத்தினான். மேலும் அவன் "நான் இப்போதே போய் என் இஷ்ட தேவதைகளுக்கு பலிகளைக் கொடுத்து இந்த மரக் குதிரை எரிந்து சாம்பலாகும்படிச் செய்கிறேன்" எனக் கூறிவிட்டுக் கிளம்பினான்.

ஆனால் தீக்ஷ்ணதிருஷ்டியால் அவ்வாறு செய்ய முடியாமல் போயிற்று. அவனால் ட்ராய் நகரைக் காப்பாற்றவும் முடியவில்லை. ஏனெனில் அவன் தன் வீட்டை அடைந்தபோது எங்கிருந்தோ இரு கொடிய விஷப் பாம்புகள் வந்து தீக்ஷ்ணதிருஷ்டியின் இரு புதல்வர்களின் உடல்களில் சுற்றி அவர்களைத் தீண்டின. தன் புதல்வர்களைக் காக்க முயன்ற தீக்ஷ்ணதிருஷ்டியையும் அவை தீண்டி சாகடித்து விட்டுப் போயின.

ட்ரோஜன்கள் அந்த மரக் குதிரையை தெய்வமாகக் கருதி வழிபடலானார்கள். பெண்கள் குளித்துவிட்டு மலர் மாலைகளை அதற்கு அணிவித்தார்கள். இனி வெற்றி தமதே என எண்ணி ட்ரோஜன்கள் விழா கொண்டாடினார்கள். ஆனால் பிரசம்ஸன் மட்டும் ஐடாபர்வதத்திற்குப் போய் விட்டான்.

**(அடுத்த இதழில் முடிவுறும்)**



# அம்புலிமாமா செய்திகள்

## படு நீச்சல் வீரர்

குற்றாலீஸ்வரன் போன்ற சிறுவர்கள் ஜலசந்திகளை நீந்திக் கடப்பதைச் செய்தித் தாள்களில் படிக்கிறோம். எமோ டி டெல்ஜ் என்னும் ஒரு பிரெஞ்சு நீச்சல்காரரோ அட்லாண்டிக் மகா சமுத்திரத்தையே நீந்திக் கடக்கத் தீர்மானித்தார். அவர் கடந்த டிசம்பர் 16ல் ஆப்பிரிக்காவிலுள்ள வெர்டி தீவிலிருந்து கிளம்பி 3860 கி.மீ. நீந்திச் சென்று இரண்டு மாதங்களுக்குப் பிறகு பார்போடாஸிலுள்ள பிரிட்ஜ் டௌனை அடைந்தார். இவர் நீந்தும் போது ஸ்லீப் பர்ஸைப் பயன்படுத்தி 4 மீட்டர் நீளமுள்ள தெப்பத்தின் மீது உறங்கினாராம். அவரை அவரது மனைவி காதரினும் இரு குழந்தைகளான தாமஸும், கிளிமெண்டும் மகிழ்ச்சியுடன் கரையில் வரவேற்றார்களாம்.

## விற்பனைக்குக் கண்

கண் தானம் பற்றி எல்லோருக்கும் தெரியும். மனிதத்தன்மையின் உயர் கட்டமாக இது கருதப்படுகிறது. ஆனால் மூத்திர கோசங்கள் விற்பனைக்கு வருவது போல இது வரவில்லை.



ஆனால் இப்போது விற்பனைக்கு என அறிவிக்கப்பட்டு உள்ள கண்கள் ஒரு சாதாரண மனிதருடையது அல்ல. இங்கிலாந்தைச் சேர்ந்த டாக்டர் ஹென்றி அப்ரஹாம் என்பவர் தன்னிடம்புகழ் பெற்ற விஞ்ஞானிஐன்ஸ்டனின்கண்கள்உள்ளதாகக் கூறுகிறார். இவற்றை என்ன விலைக்கு வேண்டுமானாலும் வாங்கத் தயாராக இருப்பதாக பிரபல பாடகர் மைக்கேல் ஜேக்ஸனும் மற்றும் பலரும் முன் வந்திருக்கிறார்கள். 1955ல் ஐன்ஸ்டின் இறந்த போது அவரது உடலின் சில உறுப்புகளை 'ஆட்டோ ஸ்பையில்' தனியாக எடுத்து வைத்தார்கள். ஆட்டோ ஸ்பை செய்த டாக்டர் தாமஸ் ஹார்வேயிடம் இன்னமும் ஐன்ஸ்டனின் மூளை உள்ளது. ஆட்டோ ஸ்பை செய்த போது ஐன்ஸ்டனின் கண்கள் எடுக்கப்பட வில்லை என அந்த டாக்டர் கூறுகிறார். இந்த விஷயம் இன்னமும் முடிவு செய்யப்படவில்லை.

## சாதனைக்குப் போட்டி



'கின்னஸ் புக் ஆஃப் ரிகார்ட்'ஸின் படி உலகிலேயே மிக வயதான பெண்மணி பிரான்ஸின் ஜூன் லூசி கோல் மண்ட் என்பவர். அவர்அண்மையில் தன் 121வது பிறந்த நாளைக் கொண்டாடினார்.ஆனால் பிரேஜிலைச் சேர்ந்த ஜெரோனியாஎன்ற பெண்மணிதான்அவளைவிட வயதானவள் எனக் கூறுகிறார். இதற்கான ஆதாரங்கள் இல்லாது போனாலும் 1871 மார்ச் 21ல் ஒரு அடிமைக் குடும்பத்தில் பிறந்த அவருக்கு அவர் பிறந்த 17வது நாளில் ஒரு மாதா கோவிலில் பெயர் சூட்டியதாகத் தெரிகிறது. 1888ல் பிரேஜிலில் அடிமைத் தனத்தை ஒழித்தார்கள். நான்கடி உயரமுள்ள ஜெரோனியா நீண்ட காலத்திற்குப் பிறகே முதுமை அடைந்துள்ளதாக டாக்டர்கள் கருதுகிறார்கள். 'கின்னஸ்' அதிகாரிகள் தம் பதிப்பில் இதைச் சேர்ப்பார்களா எனப் பொறுத்திருந்து பார்ப்போம்.




# விசித்திரமான ராட்சஸன்

தன் முயற்சியில் சற்றும் மனம் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மீதேறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின்னர் கீழே இறங்கி அவன் அதைச் சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்கையில் அதனுள்ளிருந்த வேதாளம் எள்ளி நகைத்து "மன்னனே! நீ இந்த பயங்கர நள்ளிரவில் நீ உன் சுக போகங்களை விட்டு விட்டு இப்படிப் பட்ட ஒரு முயற்சியில் இறங்கி இருக்கிறாயே. இது யாருக்காக? நீ முற்றிலும் நம்பும் ஒரு நண்பனுக்காகவா? சில சமயங்களில் இப்படிப்பட்ட நண்பர்களின் செயல்கள் சந்தேகத்தை ஏற்படுத்தக் கூடியதாகவும் இருக்கும். இதை விளக்க உனக்கு இந்துசேனன் என்ற மன்னனின் கதையைக் கூறுகிறேன். கவனமாகக் கேள்!" என்று கூறிக் கதை சொல்ல ஆரம்பித்தது.

இந்திரகிரி என்ற நாட்டை இந்துசேனன் என்ற மன்னன் ஆண்டு வந்

## வேதாளம் சொல்லும் கதை



தான். அவனது நண்பன் சிவகுரு என்னும் ஒற்றன். அவன் மன்னனி டம் மிகுந்த விசுவாசம் கொண்டவன். அவன் மன்னன் கூறும் எந்த வேலை யையும் தன் உயிரையும் பொருட் படுத்தாமல் செய்து முடிப்பவன். இதனால் மன்னனுக்கும் அவன்மீது முழு நம்பிக்கை ஏற்பட்டிருந்தது.

இந்திரகிரியின் அண்டை நாடான உதயகிரியின் மன்னன் உதயசேனன். எப்போது இந்திரகிரியைக் கைப்பற்ற சமயம் கிடைக்கும் என எதிர்பார்த்திருந் தான். ஆனால் இந்துசேனன் அவ் வித தாக்குதலுக்கு முன் தானே முத லில் உதயகிரியைத் தாக்கி உதய சேனனைத் தோற்கடிக்க எண்ணி னான். அதனால் உதயகிரியின் படை பலத்தை அறிந்து வர அவன் சிவ குருவை அந்நாட்டிற்கு அனுப்பி னான்.

சிவகுருவும் உதயகிரிக்குப் போய் அதன் படை பலத்தையும் நாட்டின் நிலைமையையும் மற்றும் பல ரகசியங் களையும் தெரிந்து கொண்டு இந்திர புரிக்குத் திரும்பி வந்து கொண்டிருந் தான். அவன் வந்த வழி மலைகளுக் கும் காடுகளுக்கும் இடையே செல் லும் பாதை.

ஓரிடத்தில் ஒரு ராட்சஸன் படுத் துத் தூங்குவதைக் கண்ட சிவகுரு அவன் கண் விழித்துத் தன்னைப் பார்ப்பதற்குள் அவனைக் கடந்து போய் விடவேண்டும் என எண்ணி வேகவேகமாக நடக்கலானான். ஆனால் அவன் நினைத்தபடி நடக்க வில்லை. ராட்சஸன் திடீரெனக் கண் விழித்து சிவகுருவைப் பிடித்து "ஓஹோ! என்னை ஏமாற்றி விட்டா போக நினைத்தாய்? அது மட்டும் நடக்காது. என்னிடமிருந்து தப்பிவிட முடியாது" என்றுக் கூறி அவனைத் தூக்கி விழுங்கப் போனான்.

அப்போது சிவகுரு "ஐயா! நான் இந்திரபுரி மன்னன் இந்துசேனனின் ஒற்றன். என் பெயர் சிவகுரு. நான் அவருக்கு ஒரு முக்கியமான தகவ லைத் தெரிவித்தாக வேண்டும். என்னை இப்போது விட்டு விடுங் கள். நான் போய் அதை மன்னனிடம் கூறிவிட்டுத் திரும்பி வந்து உங் களுக்கு இரையாகிறேன்" என்றான்.

ராட்சஸனோ "பேஷ்! பேஷ்!! நான் எனக்குக் கிடைத்த இரையை விடுவேனா? முடியாது. அந்த சமாசாரத்தை என்னிடம் சொல். நான் அதனை உன் மன்னனுக்குத் தெரிவிக்கிறேன்" என்றான். சிவகுருவோ "அந்த சமாசாரத்தை என் மன்னனைத் தவிர வேறு யாரிடமும் கூற மாட்டேன்" என்றான். அதைக்கேட்ட ராட்சஸன் "அப்படியானால் நானும் உன்னை விட மாட்டேன். கொன்று தின்னவே போகிறேன்" என்றான்.




சிவகுருவும் "ஆகா! தாராளமாக என்னைக் கொன்று சாப்பிடு. ஆனால் என் மன்னனிடம் சொல்ல வேண்டிய சமாசாரத்தை மட்டும் வேறு யாரிடமும் கூற மாட்டேன்" என்று சற்றும் பதட்டப்படாமல் கூறினான். அதுகேட்டு ராட்சஸன் திகைத்துப் போனான்.

பிறகு அவன் "சபாஷ்! உன்னைப் பாராட்டுகிறேன். நீ உன் மன்னனிடம் என்ன சொல்ல வேண்டுமோ அதைச் சொல்லிவிட்டு வா" என்று கூறி சிவகுருவை விட்டு விட்டான். சிவகுருவும் நேராக இந்திரபுரிக்குப் போய் இந்துசேனனிடம் உதயகிரியின் படை பலம் பற்றிய ரகசியங்களைக் கூறினான்.

அவன் எல்லாவற்றையும்சொன்ன பிறகு அவசர அவசரமாக எங்கோ போகத் துடிப்பதைக் கண்ட இந்து சேனன் "என்ன விஷயம்?" எனக் கேட்க சிவகுருவும் "நான் வழியில் ஒரு ராட்சஸனைக் கண்டேன். அவன் என்னை விழுங்க வந்தான். நான் தங்களிடம் முக்கியமான ஒரு தகவலைக் கூறிவிட்டுத் திரும்பி வருவதாக வாக்களித்து விட்டு வந்தேன். அதன்படி நான் அங்கு போய் அவனுக்கு இரையாகிறேன். நான் இறந்த பின் என் குடும்பத்தைப் பாதுகாக்க வேண்டும்" என்று வேண்டினான்.

சிவகுருவின் நேர்மையையும் எஜமான விசுவாசத்தையும் கண்டு இந்து சேனன் மிகவும் மகிழ்ந்து போனான். அவன் சிவகுருவை அனுப்பி விட்டுத் தன் அமைச்சர்களிடம் ஆட்சி பற்றிய ஏற்பாடுகளைச் செய்து விட்டு சிவகுருவுக்குப் பின்னால் அவனுக்குத் தெரியாமல் சென்றான்.



சிவகுரு ராட்சஸன் இருக்கும் இடத்தை அடைந்து "இதோ நான் வந்து விட்டேன். என்னை நீ கொன்று தின்னலாம்" என்றான். அதுகேட்டு ராட்சஸன் மகிழ்ச்சியும் வியப்பும் அடைந்தான். அப்போது இந்து சேனன் அவன் முன் போய் நின்று "ராட்சஸனே! சிவகுருவின் நேர்மையைக் கண்டாயல்லவா? அவன் என் வேலையைச் செய்யும்போது உன்னிடம் அகப்பட்டுக் கொண்டான். எனவே அவனைக் காப்பது என் பொறுப்பு. அதனால் அவனை விட்டு விட்டு என்னைக் கொன்று சாப்பிடு" என்றான்.

அப்போது சிவகுரு "அரசே! நான் இறப்பதால் என் ஒரு குடும்பத்திற்குத்தான் நஷ்டம். ஆனால் நீங்கள் இறந்தாலோ நாட்டிற்கே நஷ்டம். நாட்டின் கதி என்ன ஆகும்? எனவே நான்தான் ராட்சஸனுக்கு இரையாக வேண்டும்" என்றான். ஆனால் இந்து சேனனோ "சிவகுரு! நாட்டைப் பற்றி எந்தக் கவலையும் வேண்டாம். நீ இந்திரகிரியை அடையும்போது அமைச்சர்கள் உன்னை மன்னனாக்க எல்லா ஏற்பாடுகளையும் செய்திருப்பார்கள். உன் ஆட்சியில் மக்கள் நன்றாகவே இருப்பார்கள்" என்றான்.

அவர்கள் இவ்வாறு பேசியதைக் கேட்ட ராட்சஸன் "இதுவரை நான் உயிருக்கு பயந்தவர்களையே பார்த்திருக்கிறேன். ஆனால் இப்போது உயிர்விட இருவர் போட்டி போடுவதைக் காண்கிறேன். என்ன அதிசயம்! உங்கள் இருவரையுமே நான்கொன்று தின்று விடுவேன் என்ற சந்தேகம் உங்களுக்கு ஏற்படவில்லையா?" என்று கேட்டான்.

அதற்கு இந்துசேனன் "நீ சிவகுருவைக் கொல்லாமல் விட்டதிலிருந்தே உன் மனம் எப்படிப்பட்டது என்று தெரிந்து கொண்டு விட்டேன். அதனால்தான் நான் தனியாக வந்தேன். படைகளோடு வந்து உன்னைப் பிடிக்க நினைக்கவில்லை" என்றான். ராட்சஸனும் அவனைப் பாராட்டி "சரி. இப்போது உங்களில் யாரை நான் கொன்று தின்ன வேண்டும்?" என்று கேட்டான். சிவகுருவோ "என்னைத்தான். என்னால் நாட்டை

ஆளமுடியாது. மன்னர் இந்திரகிரிக்குப் போய் விடட்டும்" என்றான்.

மன்னனோ "இதுபற்றி நீதான் சற்றுபொறுமையுடன் இருந்து முடிவு செய்ய வேண்டும். அவசரப்பட்டு முடிவு எடுக்காதே. நீயே சற்று நிதானமாக யோசித்துப் பார்" என்றான். ராட்சஸன் "சரி. அதற்கு என்ன காரணம்? விளக்கமாகக் கூறு" என்றான். இந்துசேனனும் "சிவகுரு இந்திரகிரிக்குப் போய் படைகளை அழைத்துக் கொண்டு உதயகிரி மீது படை எடுத்துப் போய் உதய சேனனைத் தோற்கடிக்க வேண்டும். அப்போது சிவகுரு நாட்டின் மன்னனாகி விடுவான். நான் உனக்கு இரையாகி விடுகிறேன். அவன் மன்னனாக முடியாவிட்டால் அவன் உனக்கு இரையாகட்டும். அப்போது நீ என்னை விட்டு விடலாம். யாரைத் தின்பது என்ற பிரச்னையும் தீர்ந்து விடும்" என்றான்.



ராட்சஸனும் அதற்குச் சம்மதித்து "சிவகுரு! நீ போய் இந்துசேனன் கூறியது போலச் செய். நீ திரும்பி வரும்வரை இந்துசேனன் என் கைதி போல் இருப்பான்" என்றான். சிவகுருவும் இந்துசேனன் கூறியதுபோல இந்திரபுரிக்குப் போய் படைகளைத் திரட்டி உதயகிரியைத் தாக்கி உதய சேனனைத் தோற்கடித்தான். அவனையும் சிறைப் பிடித்தான்.

அதன்பிறகு அவன் ராட்சஸனிடம் வந்தான். அவனோடு கூட ஒரு பெண்ணும் வந்திருந்தாள். ராட்சஸன் அவளைப் பார்த்து "யார் இவள்?" என்று சிவகுருவிடம் கேட்டான். அவனும் "இவள் உதயகிரி மன்னனின் மகள் மாலினி. இவள் இந்திரகிரி மன்னனைத்தான் மணப்பதாக பிடிவாதம் பிடிக்கிறாள். எனவே இவளை இந்துசேனருக்கு மணம் செய்து வைத்துவிட்டு அவரை விட்டு விடு. அதற்குப் பிறகு நீ என்னை விழுங்கு" என்றான்.

அப்போது இந்துசேனன் "இவள் என்னை விரும்பி இருக்கலாம். ஆனால் நான் விரும்பவில்லையே. மேலும் இவள் விரும்பியது இந்திரகிரி மன்னனை. தற்போது இந்திரகிரி மன்னன் சிவகுரு. எனவே இவள்



அவனையே மணக்கட்டும். நீ என்னைத்தான் கொன்று சாப்பிட வேண்டும். சிவகுருவை அல்ல" என்றான்.

அப்போது மாலினி "ஐயா! நான் மணக்க விரும்பியது இந்துசேனரையே. அவர் மன்னராக இருந்தாலும் சரி அல்லது இல்லாவிட்டாலும் சரி. அவர்தான் என் கணவர். எனவே நீங்கள் சிவகுருவை விட்டு விட்டு இந்துசேனரோடு என்னையும் சேர்த்து விழுங்கி விடுங்கள்" என்று ராட்சஸனிடம் வேண்டினாள்.

மாலினி கூறியதைக் கேட்டு ராட்சஸன் திகைத்துப் போனான். அவன் மூவரையும் ஒருமுறை கண்ணோட்டம் விட்டுப் பிறகு "இதுவரை மனிதர்களை உடலாலும் உள்ளத்தாலும் சுயநலம் கொண்டவர்கள் என்றே நினைத்திருந்தேன். என் முன் வந்தவர்களும் அப்படித்தான் இருந்தார்கள். ஆனால் இன்றோ நட்பும், எஜமான விசுவாசமும், காதலும் எவ்வளவு தூயதானவை எனக் கண்டேன். மன்னன் தன் பணியாளனுக்கு எவ்வளவு கடன்பட்டவன் என்பதைக் காட்டினான். சிவகுரு தன் எஜமானனுக்காகத் தன் உயிரையே தியாகம் செய்ய வந்ததைக் கண்டேன். மாலினி தன் காதலுக்காகத் தன்னையே பலி கொடுத்துக் கொள்ள முன் வந்ததையும் பார்த்தேன். இப்படிப்பட்ட தியாக மணிகளான உங்கள் மூவரில் நான் யாரைக் கொன்று தின்றாலும் அது மகா பாவமே. அதனால் உங்கள் மூவரையுமே விட்டு விடுகிறேன். நானும் இப்போதே இந்தக் காட்டையும் விட்டு வேறு எங்காவது போய் விடுகிறேன்" எனக்கூறி உயரக் கிளம்பி ஆகாயத்தில் சென்று மாயமாய் மறைந்து போனான்.

வேதாளம் இக்கதையைக் கூறி "மன்னனே! சிவகுருவைப் பற்றி பல சந்தேகங்கள் என் மனதில் எழுகின்றன. உண்மையிலேயே அவன் மிகுந்த எஜமான விசுவாசம் கொண்டவன் என்றிருந்தால் உதயசேனனிடம் தோற்று வந்து ராட்சஸனுக்கு இரையாகி இருக்கலாமே. ஆனால் அப்படிச் செய்யாமல் உதயசேனனைத் தோற்கடித்தான். இந்நிலையில் இந்து

சேனன் முன்பு ராட்சஸனிடம் கூறிய படி அவன்தானே ராட்சஸனுக்கு இரையாகி இருக்க வேண்டும். சிவ குரு அல்லவே. போரில் வென்று மாலினியை அழைத்து வந்ததால் தானே இந்த திடீர் திருப்பம் ஏற்பட்டது. மாலினி இல்லாதிருந்தால் சிவ குருதானே மன்னனாகி இருப்பான்? இந்துசேனன்தானே ராட்சஸனுக்கு இரையாகி இருப்பான்? சிவகுரு ஏன் அவ்விதம்செய்தான்?மாலினியை ஏன் அழைத்துக் கொண்டு வந்து ராட்சஸன் முன் நிறுத்த வேண்டும்? என் இந்த சந்தேகங்களுக்கு சரியான விடைகள் தெரிந்திருந்தும் நீ கூறா விட்டால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகிவிடும்" என்றது.

விக்கிரமனும் "வீரமும் எஜமான விசுவாசமும் கொண்ட ஒருவன் தன் நலனைக் கருதாமல் எஜமானனின் நலனையும் நாட்டின் நலனையும் கருதுவான். உதயசேனனிடம் தோற்பது நாட்டிற்கு அவமானம். அதனால்தான் சிவகுரு உதயசேனனைப் போரில் தோற்கடித்து சிறைப்பிடித்தான். இதனால் இந்துசேனன் ராட்சஸனுக்கு இரையாக வேண்டிய நிலை ஏற்படத்தான் செய்தது. ஆனால் அதுவரை ராட்சஸனின் மனதை நன்கு புரிந்து கொண்ட சிவ குரு ராட்சஸன் இரக்கமும், எதையும் யோசித்து செயல்படும் இயல்பும் கொண்டவன் என அறிந்து கொண்டான். அப்படிப்பட்டவன் தன் பசியைப் போக்கிக் கொள்ள அவசரப்பட்டு எதையும் செய்ய மாட்டான். எனவேதான் சிவகுரு உதயசேனனைப் போரில் தோற்கடித்தான். ஆகவே இந்துசேனன் சிவகுருவின் எஜமான விசுவாகத்தை முழுக்க முழுக்க நம்பியதிலும் எவ்விதத் தவறும் இல்லை" என்று பதில் கூறினான்.

விக்கிரமனின் சரியான இந்த பதிலால் அவனது மௌனம் கலையவே அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் உயரக் கிளம்பி மீண்டும் முருங்கமரத்தில் ஏறிக் கொண்டது.



# வேக வைத்தா? வறுத்தா?

மனநோய் மருத்துவமனையிலிருந்த தன் உறவினனைக் காண கோபாலன் வந்தான். அந்த உறவினனைக் காணச் சற்று நேரமாகும் என அறிந்த கோபாலன் அம் மருத்துவமனையில் ஒரு ஓரமாகப் போய் ஒரு பெஞ்சின் மீது உட்கார்ந்தான். அப்போது இன்னொருவனும் வந்து அவனருகே உட்கார்ந்தான்.

கோபாலன் அவனிடம் பேச்சுக் கொடுத்து "நீங்கள் இங்கு யாரையாவது பார்க்க வந்திருக்கிறீர்களா?" என்று கேட்டான். அவனும் "நான் கடந்த நான்கு மாதங்களாக இங்கு சிகிச்சை பெற்று வருகிறேன். என் மூளை சற்றுச் சரி இல்லை என்று கூறி என்னை இங்கு சேர்த்துவிட்டுப் போனார்கள்" என்றான்.

அந்த மனிதன் எல்லோரையும் போல சகஜமாகப் பேசுவது கண்டு கோபாலன் "நீங்கள் எல்லோரையும் போல நன்றாகத்தானே பேசுகிறீர்கள். உங்களுக்கு சிகிச்சை எதற்கு?" என்று கேட்டான். அவனும் "இங்குள்ள மருத்துவர் தன் மன நிலையையே கெடுத்துக் கொண்டு விட்டாரென நான் நினைக்கிறேன். அது சரி. எனக்கு தோல் செருப்பைவிட கட்டைச் செருப்புகளே பிடிக்கும். உங்களுக்கு இவற்றில் எது பிடிக்கும்?" என்று கேட்டான்.

கோபாலனும் "எனக்குத் தோல் செருப்புதான் பிடிக்கும்" என்றான். அப்போது அவன் "நீங்கள் அவற்றை வேகவைத்துச் சாப்பிடுவீர்களா அல்லது வறுத்துச் சாப்பிடுவீர்களா?" என்றுக் கேட்டான். அதைக் கேட்ட கோபாலனின் தலை சுற்றியது. அவன் மறு நிமிடமே அங்கிருந்து எழுந்து சென்றான்.





ஜெய்சால்மீர் கோட்டை

# ராஜபுத்திரர் கோட்டைகள்-2

*எழுதியவர் :* **மீரா உக்ரா** *படங்கள் :* **சுலபா டாகூர்**

எங்கும் பாலைவன மணல் பரவி இருக்க மஞ்சள் நிறச் சுண்ணாம்புக் கல்லால் கட்டப்பட்ட மதில் சுவர்களையுடைய ஜெய்சால்மீர் கோட்டை காலை வேளையில் சூரியன் உதிக்கும்போது தங்கக் கோட்டை போல மிக அழகாகத் தென்படுகிறது.

1156ல் பாடி மன்னன் ராவல் மன்னன் ஜெயபாலதேவன் கட்டிய இக் கோட்டையின் சிறப்பு இதன் இரட்டை மதில் சுவர்கள். வெளிப்புற மதில் உட்புற மதிலின் பாதி உயரத்திற்குக் கட்டப்பட்டுள்ளதால் உட்புற மதில் அதன் மீது கட்டப்பட்டுள்ளது போலத் தோற்றம் அளிக்கிறது. இராணுவ வீரர்கள் இதைக் கமர்கோட் என்றும் பெள்தா என்றும் கூறுகிறார்கள். இக் கோட்டை பல போர்களைக் கண்டது. டில்லி சுல்தான் பால்பனின் நீண்ட நாள் முற்றுகையை (1276லிருந்து 1283 வரை) தாங்கியது.

ஜெய்சால்மீர் வணிக மையமாக இருந்தது. ஆப்கனிஸ்தானம், சிரியா, பாரசீகம், ஈராக், எகிப்து ஆகிய நாடுகளுக்குப் போய் வரும் வியாபாரிகள் இதன் வழியே சென்று வந்தனர். 1570ல் பாடி லர்களுக்கும் அக்பருக்கும் உடன்படிக்கை ஏற்பட்ட பின் இதன் வியாபார முக்கியத்துவம் மேலும் வலுப்பெற்றது. ஜைன வியாபாரிகள் பல ஆலயங்களையும் மாளிகைகளையும் கட்டினார்கள். அவை சிற்பக் கலைக்கு எடுத்துக்காட்டாக உள்ளன. வேலைப்பாடு மிக்க சன்னல்களையும் பல ஓவியங்களையும் இவற்றில் காணலாம்.

ஜெய்சால்மீரின் சிறப்பான
சன்னல்களும் சிற்பங்களும்



ராஜஸ்தானத்தில் எல்லாக் கோட்டைகளில் மிகவும் புதிது எனச் சொல்லப்படுவது பிகானீரின் ஜுனாகட் கோட்டை (1594). இது நன்கு பாதுகாக்கப்பட்டு வருகிறது. மாளிகைகளில் வேலைப்பாடு மிக்க சன்னல்களும், ஓவியங்களும் மிக நேர்த்தியானவை. சன்னல்களின் கற்கதவுப் பகுதிகள் பாலைவனத்தின் வெப்பக் காற்றை உட்புறம் வரவிடாமல் சில்லென்றிருக்கச் செய்கின்றன.

ஜெய்பூரின் அருகே அம்பர்கட் கோட்டை கச்சவாஹா மன்னர்கள் கட்டியதாகும். இங்குள்ள அழகிய மாளிகைகள் மிகவும் பெயர் பெற்றவை.



ஜுனாகட் கோட்டை



பிகானீர் அரண்மனையின் உட்பகுதி

அம்பர்கட் கோட்டையைச் சுற்றி ஜெய்கட், நாஹர்கட் என்ற இரு கோட்டைகள் கட்டப்பட்டு உள்ளன. இந்த மூன்று கோட்டைகளும் ஒருப்போதும் எவ்விதத் தாக்குதலுக்கும் ஆளாகவில்லை.

சில்ஹறா மலை மீது கட்டப்பட்ட ஜெய்கட் கோட்டைக்குள் பீரங்கித் தொழிற்சாலை உள்ளது. அம்பர் கோட்டையிலிருந்து இக்கோட்டைக்குச் செல்ல இரகசிய சுரங்கப்பாதை ஒன்று உள்ளது. இக்கோட்டையின் உட்புற அறைகளில் அரச குடும்பத்திற்குச் சொந்தமான செல்வம் ஒளித்து வைக்கப்பட்டனவாம். இங்கு மலைப் பகுதிகளில் வாழும் 'மீனா' என்ற இனத்தவர் இச்செல்வத்தைப் பாதுகாத்து வந்தார்களாம். அரச குடும்பத்திற்கு வேறு எந்த வழியும் இல்லை என்ற நிலை ஏற்பட்டபோது மன்னனே அங்கு போய் தேவைப்பட்ட பணத்தை எடுத்து வருவானாம். அப்போதும் மீனா இனத்தலைவன் மன்னனின் கண்களில் துணியைக் கட்டித்தான் அறைக்கு அழைத்துச் செல்வானாம். மன்னனும் அப்போதைய செலவுக்கு வேண்டிய பணத்தை மட்டும் எடுத்து வருவானாம். நம் நாட்டிலேயே மிகவும் கனமான பீரங்கி எனக் கருதப்படும் 'ஜெய்வான்' ஜெய்கட் கோட்டையில்தான் உள்ளது. இதைப் பரீட்சிக்க மட்டும்தான் ஒருமுறை சுட்டுப் பார்த்தார்களாம்.

1732ல் சூரஜ்மல் என்ற ஜாட் மன்னன்பரத்பூரில் அதற்கு முன்னிருந்த கோட்டை மீது லோஹாகட் கோட்டையை நிர்மாணித்தான். இக்கோட்டையின் மதில் சுவர் மண்ணால் கட்டப்பட்ட போதிலும் பீரங்கி குண்டுகள் கூடத் துளைக்க முடியாதபடி அமைந்துள்ளன.

ஜெய்கட் கோட்டை காவல் சிகரம்



1825 நவம்பரில் கிழக்கிந்தியக் கம்பெனியின் 27,000 வீரர்கள் இக்கோட்டையை முற்றுகை இட்டார்கள்.

64,446 பீரங்கி குண்டுகள் சுட்டும் பயன் ஏற்படாததால் வடபுறமுள்ள சுவரைத் தகர்க்க 10,000 பவுண்டுகள்

ஜெய்வான்



வெடி மருந்நதைப் பயன்படுத்தினார்கள். அந்த பீரங்கி வெடி சத்தம் ஆக்ரா வரை கேட்டதாம். 1826 ஜனவரி 18ல் பரத்பூர் வீழ்ச்சியுற்றது.

1214ல் தேவ்சிங் என்ற ஹாடா தலைவன் மீனா இனத் தலைவனான பூண்டூ என்பவனைத் தோற்கடித்து பூண்டியைத் தலைநகராக்கொண்டு ஹாடா நாட்டை நிறுவினான். அவனது கொள்ளுப் பேரன் ராவ் பார்சிங் 1352ல் தாராகட் கோட்டையைக் கட்டினான். அவனது வம்சத்தவர் தொடர்ந்து 600 ஆண்டுகளுக்கு அந்நாட்டை ஆண்டு வந்தார்கள்.



தாராகட் கோட்டை

ஹாடா படை வீரர்களைப் பற்றிய பல கதைகள் வழக்கில் உள்ளன. ஒரு முறை உதயபூர் ராணா லாகா பூண்டி கோட்டையைக் கைப்பற்றும் வரை உணவு அருந்துவதில்லை என்று சபதம் செய்தானாம். அவரது உடல்நலம் குன்றவே அவனது உயிரைக் காக்க அவனது அமைச்சர்கள் 'பூண்டி' போல ஒரு பொம்மைக் கோட்டையை அமைத்து அதைக் 'கைப்பற்றி'விட்டு உணவு ஏற்கச் சொன்னார்களாம்.

அவ்வாறு ஒரு போலிக் கோட்டையை அமைத்து ராணா லாகாவை எதிர்க்க கும்பஹாடா என்ற வீரனையும் நியமித்திருந்தார்கள். ராணா அவனைத் தாக்கும் போது அவன் தோற்றுவிட வேண்டுமென அவனிடம் கூறி இருந்தார்கள். ராணாவும் அந்தக் கோட்டையைத் தாக்க வந்தான். ஆனால் அந்த போலிக் கோட்டையிலிருந்து அம்புகள் சரமாரியாகப் பாய்ந்து வந்தன. கும்பஹாடா போலிக் கோட்டைக்குள் இருந்து வந்து "கோட்டை போலியானாலும் இதனையும் கைப்பற்ற விடமாட்டேன்" என்று கூறிக் கத்தியை உருவிக் கொண்டு நின்றானாம். இதைக் கண்ட உதயபூர் ராணா திகைத்து அப்போதே பூண்டியைக் கைப்பற்றும் எண்ணத்தை விட்டு விட்டான். சில நல்ல ஓவியர்கள் பூண்டியில் இருந்தனராம்.

போலிக் கோட்டை



# பிசாசுகளே! நன்றி!

மண்ணூரில் மருதப்பன் என்ற மாந்திரீகன் இருந்தான். அவனைக் கண்டாலே எந்தப் பேயும் பிசாசும் ஓடி விடும் என்று ஊரார் பேசிக் கொண்டனர். அவனது மனைவி தருமி. அவள் தாராள மனம் படைத்தவள். ஆனால் மருதப்பன் மகாக் கஞ்சன். யாருக்கும் எதுவும் கொடுக்கக் கூடாது என்றிருப்பவன்.

ஒருமுறை அவன் பக்கத்திலுள்ள கிராமத்திற்குப் பேய் ஓட்டச் சென்றிருந்தான். அன்று மாலை மண்ணூரிலுள்ள அவனது வீட்டிற்கு தருமியின் உறவினர்கள் நால்வர் வந்தனர். அவர்களைக் கண்டு மகிழ்ந்த தருமி "நல்லவேளையாக இன்று வந்தீர்கள். என் கணவர் ஊரில் இல்லை. பேய் விரட்ட அடுத்த ஊருக்குப் போயிருக்கிறார். அவர் குணம்தான் உங்களுக்குத் தெரியுமே. அவர் வருவதற்குள் நீங்கள் சாப்பிட்டு விட்டுப் போய் விடலாம்" என்று கூறி சமையலை ஆரம்பித்தாள்.

அவர்களும் மருதப்பன் வருவதற்குள் சாப்பிட்டு விட்டுப் போய் விடலாம் என்று எண்ணி அங்கே இருந்தார்கள். தருமியும் சமையலை முடித்து அவர்களுக்கு இலை போட்டுப் பரிமாறலானாள். இச்சமயத்தில் வாசல் கதவு தடதடவென்று தட்டப்படவே தருமி வந்திருப்பது யாரென்று சன்னல் வழியாகப் பார்த்தாள். வெளியே நின்றிருப்பது தன் கணவர்தான் என்று அறிந்ததும் உடனே அவள் சன்னல் கதவுகளைமூடினாள்.

அவள் தன் உறவினர்களிடம் "என் கணவர் வந்து விட்டார். இதோ அவரது வேஷத்தைப் பார்த்துத் தெரு நாய்கள் கூட குரைக்க ஆரம்பித்து விட்டன. இனி அவர் தன் மந்திரக் கோலால் அவற்றை மிரட்டித் துரத்தி விட்டுத்தான் வருவார். நான் விளக்கை

-கி. வெங்கடாசலம்-



கள் வேகவேகமாக ஓடி வந்து மருதப்பனை உரசித் தள்ளிவிட்டு வேகமாக இருட்டில் ஓடி மறைந்து விட்டன.

"ஐயோ! யார் இப்படி இடித்துத் தள்ளிவிட்டு ஓடுவது?" என்று யோசித்தவாறே மருதப்பன் "தருமி! எங்கே போய் விட்டாய்? என்னை யாரோ பிடித்துத் தள்ளிவிட்டு ஓடி விட்டார்கள். யார் இவர்கள்? இருட்டில் ஒன்றும் சரியாகத் தெரியவில்லையே. தருமி எங்கே போனாள்? அவளிடம் கேட்கலாம் என்றால் அவளைக் காணவில்லையே. என்னைத் தள்ளியவர்கள் மனிதர்களா அல்லது பேய் பிசாசுகளா என்று தெரியவில்லை. தருமி! வா சட்டென்று" உரக்கக் கூவினான்.

எல்லாம் அணைத்து விடுகிறேன். நீங்களெல்லாம் சட்டென சாப்பிட்டு விட்டு அவர் கையில் அகப்படாமல் தப்பிப் போய் விடுங்கள்" என்று கூறிக்கொல்லைப் புறத்திற்கு சென்று விட்டாள்.

அவர்களும் சட்டென இலைகளிலுள்ளவற்றை எடுத்து வாயில்போட்டு 'அபக்' 'அபக்'கென்று விழுங்கினார்கள். அப்போது மருதப்பன் கதவைப் பலமாகத் தட்டி "தருமி! என்ன செய்து கொண்டிருக்கிறாய்? வந்து கதவைத் திற" என்று கத்தினான்.

எங்கும் ஒரே இருட்டு. அச்சமயத்தில் மருதப்பனின் வீட்டு வாசல் கதவு சட்டெனத் திறந்து கொண்டது. வீட்டினுள்ளிருந்து நான்கு உருவங்

கொல்லைப் புறத்திலிருந்து "இதோ வந்துவிட்டேன்" என்று கூறியவாறே தருமி வீட்டினுள் ஓடி வந்தாள். மாடத்திலிருந்த விளக்கை அவள் ஏற்றியவாறே தன் கணவனைப் பார்த்து "ஓ! இதென்ன! உங்கள் ஆடைகளில் கத்திரிக்காய் சாம்பாரும் தலைமீது இலைகளும் உள்ளனவே. என்ன விஷயம்?" என்று கேட்டாள் ஆச்சரியப்பட்டவாறே.

மருதப்பனும் தான் அணிந்திருந்த ஆடைகளைத் தடவிப் பார்த்தும் தலைமீதுள்ள இலையைத் தூக்கி எறிந்தவாறே வீட்டினுள் சென்றான். அங்கு தரைமீது சாம்பார், சாதம், காய், கூட்டு என்று எல்லாம் சிதறிக்

கிடப்பது கண்டு அவன் "ஏய் தருமி! என்ன இது? நான் ஊரில் இல்லாத போது யாருக்கோ விருந்து சாப்பாடு தயாரித்துப் போட்டிருக்கிறாய் போலிருக்கிறதே" என்று கேட்டான் கோபத்தோடு.

தருமி மாடத்திலுள்ள விளக்கை எடுத்துச் சுற்றிலும் பார்த்துவிட்டு "ஆகா! இதெல்லாம் என்ன மாயமோ! நல்ல வேளை நீங்கள் தப்பி உயிருடன் இருக்கிறீர்களே. அது என் தாலி பாக்கியம்" என்றாள். மருதப்பனோ "என்ன இது? நான் கேட்ட கேள்விக்கு பதில் சொல்லாமல் என்னவோ தாலி பாக்கியம், நல்ல வேளை என்றெல்லாம் சொல்கிறாயே. என்னதான் நடந்தது? எனக்கு ஒன்றும் புரியவில்லையே. யார் வந்தார்கள்? என்ன செய்தார்கள்? விவரமாகச் சொல்" என்று சற்று ஆவேசம் குறைந்தவனாக ஏதோ சந்தேகப்பட்ட வாறே கேட்டான்.

தருமி தன் கண்ணீரைத் துடைத்துக் கொள்வது போல நடித்து "ஐயோ! நீங்கள் இந்த மந்திரம் மாயம் என்றெல்லாம் கற்றுக் கொள்ளாமல் வேறு ஏதாவது தொழிலைக் கற்றிருந்தால் எவ்வளவு நன்றாக இருந்திருக்கும்? அதனால்தான் இப்படி எல்லாம் நடந்திருக்கிறது" என்றாள். மருதப்பனோ "என்ன பேச்சுப் பேசுகிறாய்? இந்தத் தொழிலுக்கு என்ன குறைச்சல்? இன்றைக்கு இப்படி ஏன் பேசுகிறாய்? உன்னை ஏதாவது பேய், பிசாசு பிடித்துக் கொண்டுவிட்டாதா?" என்று கேட்டு சீறி விழுந்தான்.



தருமியும் "என்றாவது ஒரு நாள் இப்படி நடக்கும் என்று நினைத்தேன். அது இன்று நடந்துவிட்டது. நீங்கள் அடுத்த ஊருக்குப் போய் பேய் பிசாசுகளை விரட்டத்தானே விரட்டினீர்கள்! நீங்கள் இங்கே இல்லை எனத் தெரிந்து கொண்டு அவை நேராக இங்கே வந்துவிட்டன. என்னைப் பார்த்து அவை "ஓஹோ! நீதான் அந்த மாந்திரீகன் மருதப்பனின் மனைவியா? நாங்கள் ஏதோ நிம்மதியாக இருக்க யாரையாவது பற்றிக் கொண்டால் இந்த மாந்திரீகன் அங்கு வந்து எங்களை விரட்டி விடுகிறான். இன்று என்ன செய்யப்

போகிறோம் பார். அவனது ஓலைச் சுவடிகள், மற்றுமுள்ள மந்திரப் பொருள்களை எல்லாம் நாசப்படுத்தி அவற்றை எதற்கும் பயன்படாதபடி செய்து விடுகிறோம் பார்" எனக் கூறி இங்கே உட்கார்ந்து விட்டன" என்றாள்.

மருதப்பன் அப்போது "எங்கே அவை? நான் அவற்றை என் மந்திர சக்தியால் கட்டிப் போட்டு என்ன பாடுபடுத்துகிறேன் பார்" என்று உறுமினான்.

தருமியும் "இருங்கள் மீதமும் கேளுங்கள். அந்தப் பிசாசுகளை நீங்கள் வரும்வரை எப்படியாவது தங்க வைக்க வேண்டும் என நினைத்தேன். அதனால் அவற்றிடம் தந்திரமாக 'என் கணவர் இப்போது வர மாட்டார். உங்களுக்கு வாய்க்கு ருசியாக சமைத்துப் போடுகிறேன். சாப்பிட்டு விட்டு நீங்கள் உங்கள் இஷ்டம் போல என்ன வேண்டுமானாலும் செய்யுங்கள்' என்றேன். அவை சம்மதித்துச் சமையலான பின் சாப்பிட உட்கார்ந்தன. அவை சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போது நீங்கள் வந்து விட்டீர்கள். உங்கள் குரலைக் கேட்டதும் அவை விளக்குகளை எல்லாம் அணைத்து விட்டு கதவைத் திறந்து கொண்டு உங்களைக் கீழே தள்ளிவிட்டு ஓடி விட்டன. அவற்றின் கையிலிருந்த சாம்பார் உங்கள் ஆடைகளில் பட்டுவிட்டது. ஏதோ ஒரு பேய் இலையை உங்கள் தலைமீது போட்டிருக்கிறது" என்றாள்.

அது கேட்டு மருதப்பன் நடுநடுங்கியவாறே "உண்மையிலே பிசாசுகள் வந்தனவா! ஐயோ! நான் மந்திரங்கள் ஓதி நம் வீட்டைப் புனிதமாக்குகிறேன். பிசாசுகள் இருந்ததால் நம் வீடு மாசுபடுத்தப்பட்டுவிட்டது" எனக் கூறியவாறே பூஜை அறைக்குள் சென்றான்.

தருமியும் கவலை நீங்கியவளாக "அப்பாடா! நான் பிசாசுகளைப் பற்றிக் கூறியதை என் கணவர் நம்பிவிட்டார். நான் தப்பித்தேன். பிசாசுகளுக்கு நன்றி" என மனதிற்குள் கூறிக் கொண்டாள்.





# இரு வேலையாட்கள்

மணலூர் மிராசுதாரர் மாரப்பனுக்கு நல்ல வேலையாள் ஒருவன் தேவைப் பட்டது. அவர் தன் நண்பன் பூபதி யிடம் அது பற்றிக் கூறினார். பூபதியும் "என்னிடம் இரண்டு வேலையாட்கள் இருக்கிறார்கள். இருவரும் மிக நல்ல வர்கள். நேர்மையானவார்கள். ஒரு வன் புத்திசாலி. ஆனால் வேலையில் கொஞ்சம் கவனக் குறைவாக இருப் பான். ஆனால் இவனுக்கு சம்பளம் அதிகம் கொடுக்க வேண்டும். மற்ற வன் புத்திசாலி அல்ல. வேலையை முழுமனதுடன் செய்வான். அவ னுக்குச் சம்பளம் குறைவாகக் கொடுத்தால் போதும்" என்றான்.

மாரப்பனும் "எஜமானன் புத்தி சாலியாக இருந்தால் வேலையாள் புத்திசாலியாக இல்லாவிட்டாலும் கவலை இல்லை. வேலையில் ஈடு பாடு கொண்டு நேர்மையானவனாக இருந்தால் போதும். மேலும் அவ னுக்குச் சம்பளமும் நூகுறைவாகக் கொடுத்தால் போதும் என்பதால் இப்படிப்பட்டவனையே அனுப்பு" என்றார்.

பூபதியும் கந்தனை மாரப்பனிடம் அனுப்பி வைத்தான். ஒரு மாத கால அவனது வேலையில் மாரப்பன் திருப்தி அடைந்தார். ஒரு நாள் பட் டணத்திலுள்ள அவரது மகளிட மிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் "அப்பா, இவரது தங்கைக்குக் கல் யாணம் நிச்சயமாகியுள்ளது. சம்மந்தி வீட்டார் மாம்பழக் கலரில் இரண்டு பட்டுப் புடவைகள் கேட்கிறார்கள். சனிக்கிழமைக்குள் வேண்டும். நம் ஊர்தறிகாரரிடம் சொல்லி வாங்கி அனுப்பவும்" என்றிருந்தது.

மாரப்பனும் தறிகாரரிடம் விஷ யத்தைச் சொல்லவே அவரும் "இன்று புதன். வெள்ளிக் கிழமைக் குள் கொடுக்கிறேன்" என்றார். மாரப்

-எஸ். சோபினி-



கொடு" என்று கூறி அனுப்பினார்.

கந்தன் போன பிறகு அடுத்த வீட்டில் ஏதோ அமளி ஏற்படவே அது என்ன என்று பார்க்க மாரப்பன் சென்றார். அவரது நண்பன் வேலுசாமியின் தந்தைக்குத் திடீரென நெஞ்சு வலி கண்டுவிட்டதாம். அதை குணப்படுத்தத் தம்மால் முடியாது என உள்ளூர் வைத்தியர் கூறி நோயாளியை உடனே பட்டணத்து மருத்துவமனையில் சேர்க்கும்மாறு கூறிவிட்டராம்.

மாரப்பனுக்கு மருத்துவமனை டாக்டர்களைத் தெரியுமாதலால் வேலுசாமியின் தந்தையை மருத்துவமனையில் சேர்க்கப் பட்டணத்திற்குக் கிளம்பினார். அப்படியே பட்டணத்திலுள்ள தம் மகளையும் பார்த்து வரலாம் எனவும் எண்ணினார்.

அவர் பட்டணத்திற்குக் கிளம்பும் முன் கந்தன் கிளம்பிப் போய் விட்டானா என்று விசாரித்தார். அவன் கிளம்பிப் போய்விட்டதாகத் தெரிந்தது.

வழியிலும் கந்தனை அவர் சந்திக்க முடியாது. ஏனெனில் குறுக்கு வழியில் கந்தன் போய் சீக்கிரம் பட்டணம் சேர்ந்து விடுவான். அவரது வண்டியோ நேர் பாதையில் செல்ல வேண்டுமாதலால் தாமதமாகும். ஆயினும் அவரது வண்டி வேகமாகப் போய்ப் பட்டணத்தையும் அடைந்துவிட்டது.

மாரப்பன் வேலுசாமியின் தந்

பனும் கடிதம் கொண்டு வந்த ஆளிடம் அதைச் சொல்லி அனுப்பினார்.

தறிகாரரும் வியாழக் கிழமைக்குள் புடவைகளைத் தயாரித்து விட்டார். ஆனால் வெள்ளிக் கிழமை காலை மழை பிடித்துக் கொண்டது. தறிகாரர் புடவைகளைக் கட்டி எடுத்து வந்து "இவற்றை மழையில் நனையவிடாமல் எடுத்துச் செல்ல வேண்டும். நனைந்தால் சாயம் போய் விடும்" என்று கூறிக் கொடுத்து விட்டுப் போனார்.

மாரப்பன் கந்தனை அழைத்து "பத்திரமாகக் கட்டப்பட்டுள்ள இந்தப் புடவைகளை மழையில் நனையவிடாமல் எடுத்துப் போய்ப் பட்டணத்திலுள்ள என் மகளிடம் இன்றே

தையை நல்ல டாக்டரிடம் காட்டினார். அவரும் நோயாளியைப் பரிசோதித்துப் பார்த்துவிட்டு "பயப்பட வேண்டியதாக எதுவும் இல்லை. இரண்டு நாட்கள் என் மேற் பார்வையில் இருந்தால் குணமாகி விடுவார்" என்று கூறினார்.

மாரப்பன் நோயாளியை கவனிக்க தக்க ஏற்பாடுகளைச் செய்து முடித்துவிட்டுத் தன் மகளின் வீட்டை அடைந்தார். அப்போது அவரது மகள் "நீங்கள் ஏனப்பா சிரமப்பட்டு வந்தீர்கள்? யாராவது வேலையாளிடம் புடவைகளைக் கொடுத்து அனுப்பி இருக்கலாமே" என்றாள். அப்போது அவளது மாமனார் "என்னம்மா இது? சுபகாரியத்திற்கு வந்திருக்கும் உன் தந்தையை ஏன் வந்தீர்கள் என்றா கேட்பது?" என்று மருமகளைக் கடிந்து கொண்டார்.

மாரப்பன் தான் எப்படி திடீரெனப் பட்டணத்திற்குக் கிளம்ப வேண்டி வந்தது என்பதைத் தன் மகளிடம் விவரமாகக் கூறினார். பிறகு அவர் "நீங்கள் என்னிடம் கேட்டதைக் கொண்டு பார்த்தால் நான் அனுப்பிய என் வேலையாள் கந்தன் இன்னும் இங்கு வந்து சேர வில்லை என்று தெரிகிறது. இன்னும் சற்று நேரத்தில் வந்து விடுவான் என்றே நினைக்கிறேன். வந்ததுதான் வந்தேன். இன்றைய சுபகாரியத்தை இருந்து பார்த்துவிட்டே போகிறேன்" என்றார்.

இதற்குச் சற்று நேரத்திற்குப்



பின் கந்தன் வந்து சேர்ந்தான். அவன் மழையில் நன்கு நனைந்து போயிருந்தான. அவனைக் கண்ட மாரப்பன் "ஏன் இப்படி மழையில் நனைந்து கொண்டே வரவேண்டும்? எங்காவது சற்று நின்றுவிட்டு மழை நின்ற பின் வந்திருக்கலாமே" என்று கூறினார்.

கந்தனும் "ஐயா! நீங்கள் சனிக்கிழமையன்று நான் இங்கு வந்துவிட வேண்டும் என்று கூறினீர்கள். அதன்படி நானும் நேராக இங்கு வந்திருக்கிறேன். தலை போனாலும் நான் எதைச் செய்வதாக ஒப்புக் கொண்டேனோ அதைச் செய்தே முடிப்பேன்" என்று பெருமை பொங்கக் கூறினான்.

மாரப்பனும் "அது சரி. நான் கொடுத்த புடவைகளை மழையில் நனையவிடாமல் பார்த்துக் கொண்டாயா?" என்று கேட்டார். கந்தனும் "நீங்கள் சொன்ன பின் அதை மழையில் நனையவிட்டு விடுவேனா? அதன் மீது ஒரு சொட்டுத் தண்ணீர் கூட விழாதபடி பத்திரமாக வைத்திருக்கிறேன்" என்றான்.

மாரப்பனும் "பேஷ். பேஷ். அதை எப்படிச் செய்தாய்? சொல் பார்க்கலாம்" என்று கேட்டார். "நான் ஊரைவிட்டுக் கிளம்பும் போதே மழை பெய்ய ஆரம்பித்தது. எனவே புடவைகளைப் பெட்டியில் பத்திரமாக வைத்து மூடி வைத்தேன்" என்றான்.

மாரப்பனும் "சரி. பெட்டி எங்கே? அதை எடுத்து வா" எனவே கந்தனும் "நான் அந்தப் பெட்டியை மழையில் நனையவிட்டு விடுவேனா? மழையில் அதை எடுத்து வந்தால் எப்படியாவது இடுக்கு வழியாக அதற்குள் மழை நீர் போய்விடுமே. அதனால் அப்பெட்டியை மிக பத்திரமாக என் வீட்டில் வைத்துவிட்டே வந்தேன்" என்றான்.

அதைக் கேட்டு அங்கிருந்த எல்லோரும் உரக்கச் சிரித்தனர். மாரப்பன் அவமானத்தால் தலைகுனிந்து கொண்டார். அவர் உடனே தன் வண்டியை அனுப்பி கந்தனின் வீட்டிலிருந்து புடவைகளை எடுத்து வரச் செய்தார்.

ஊர் திரும்பிய அவர் பூபதியிடம் நடந்ததைக் கூறி "இந்தக் கந்தன் நேர்மையானவன். ஆனால் புத்தி இல்லாதவன். இப்படிப்பட்டவனை விட நீ முன் கூறிய புத்திசாலியை அனுப்பு. வேலையில் சற்று சுணங்கினாலும் பரவாயில்லை. அவனுக்கு அதிக சம்பளம் கொடுப்பதைப் பற்றிக் கவலை இல்லை. கந்தனை மாடுகளைப் பார்த்துக் கொள்ள வைத்துக் கொள்கிறேன். மற்றவன் என் சில்லரை வேலைகளை கவனிக்கட்டும்" என்றார்.

பூபதியும் அதற்குச் சம்மதித்தான்.






தமக்குப் புகலிடம் கொடுத்த அந்த அந்தணர் குடும்பத்திற்கு ஏதோ சங்கடம் ஏற்பட்டுள்ளது என ஊகித்த குந்தி அந்த குடும்பத்தினர் உட்கார்ந்திருந்த இடத்திற்குப் போய் என்ன நடந்தது என்று விசாரித்தாள்.

அந்த அந்தணரும் "இனி இந்த ஊரில் என் குடும்பத்தவருடன் நிம்மதியாக வாழ முடியாது. எங்களை ஒரு ராட்சஸன் பயமுறுத்தி வருகிறான். அவனுக்கு தினமும் இவ்வூரார் ஒரு வண்டி நிறைய உணவும் இரண்டு எருதுகளும் ஒரு மனிதனும் அனுப்ப வேண்டும். அவன் அவற்றை விழுங்கித் தன் பசியைத் தணித்துக் கொள்வான். இவற்றை என்றாவது அனுப்பத் தவறினால் அவன் ஊருக்குள் நுழைந்து எதிரில் வந்தவர்களைக் கொன்று விழுங்குவான். இவ்வூரார் முறை போட்டுக் கொண்டு தினமும் அந்த வீட்டிலிருந்து உணவை அனுப்ப ஏற்பாடு செய்துள்ளனர். இன்று என் வீட்டின் முறை. நான் உணவோடு வண்டியை ஓட்டிச் செல்கிறேன் என்றால் என் மனைவி தான் போவதாகக் கூறுகிறாள். என் ஒரே மகனோ தான் போவதாகக் கூறுகிறான். நான் அவர்கள் போகக் கூடாது என்று கூறிக் கொண்டிருக்கிறேன்" என்றார்.

அந்தணரின் மனைவியோ "இவர் போய் விட்டால் நானும் என் மகனும் என்ன செய்வோம்? நான் ராட்சஸனுக்கு இரையாகிறேன். அந்நிலையில் இவர் என் மகனை வளர்த்துக் காப்பாற்றட்டும்" என்றாள். அவர்களது



மகனோ "இவர்கள் வயதானவர்கள். வாழ்வின் கடைசி காலத்தில் இவர்கள் சிரமப்படக் கூடாது. எனவே நான் ராட்சஸனுக்கு உணவு எடுத்துப் போய் அவனுக்கு இரையாகிறேன்" என்றான்.

குந்தி தேவி அவர்கள் கூறியதைக் கேட்டுவிட்டு "நீங்கள் கவலைப் படாதீர்கள். உங்கள் மூவரில் யார் ராட்சஸனுக்கு இரையாகப் போனாலும் இந்தக் குடும்பத்திற்கு நஷ்டமே. எனக்கு இதற்கு ஒரு வழி தோன்றுகிறது. நீங்கள் எங்களுக்குப் புகலிடம் கொடுத்து உதவி இருக்கிறீர்கள். அதற்கு பதிலாக நாங்கள் உங்களுக்கு இந்த சமயத்தில் உதவ வேண்டும். அதனால் என் புதல்வர்களில் ஒருவனை இன்று உணவு வண்டியுடன் அனுப்புகிறேன்" என்றாள்.

அதைக் கேட்ட அந்தணர் "ஐயோ இதென்ன! நீங்கள் என் வீட்டிற்கு வந்த விருந்தாளிகள். உங்களில் ஒருவரை ராட்சஸனுக்கு உணவாக அனுப்பி அந்த மாபெரும் பாவத்தை நான் சுமக்க மாட்டேன். எங்கள் குடும்பத்தவரில் யாராவது ஒருவரே போகிறோம். நீங்கள் உதவுவதாகக் கூறியதற்கு "மிக்க நன்றி" என்றார்.

குந்தியோ "இல்லை. இல்லை. நான் சொல்வதைச் சற்று கவனமாகக் கேளுங்கள். இதனால் உங்களுக்கு மட்டுமல்ல, இந்த ஊருக்கே நன்மை ஏற்படும். இனி அந்த ராட்சஸனுக்காக இந்த ஊரார் பயப்பட வேண்டியே இராது. நான் அனுப்ப போகும் என் மகன் மிகவும் பலம் பொருந்தியவன். அவன் அந்த ராட்சஸனைக் கொன்றுவிட்டே வருவான். என் மகனைப் பற்றி நான் நன்கு அறிவேன். ஆயிரம் யானைகள் பலம் படைத்தவன் வந்தாலும் அவனை எதிர்த்துப் போர் புரிந்து கொல்லக் கூடியவன் என் மகன். அதனால் சற்றும் கவலைப்பட வேண்டாம். நீங்கள் உணவு வண்டியைத் தயார் செய்யுங்கள்" என்றார்.

அந்தணர் அதற்கு உடனேயே சம்மதித்துவிடவில்லை. மிகவும் தயங்கினார். குந்தி தேவியோ "என் மகனை இன்று அனுப்புவதால் இனி பகாசுரனைப் பற்றிய பயமே இந்த

ஊராருக்கு இராது. இது உங்களுக்கு மட்டும் நன்மை பயப்பதல்ல, இந்த ஊருக்கே நன்மை ஏற்படும். அதனால் நான் கூறுவதற்கு எவ்விதத் தடையும் கூறாமல் நான் சொல்வதை ஏற்றுக் கொள்ளுங்கள்" என்றாள்.

அந்த அந்தணருக்கு தன் பிரச்னைக்கு ஒரு வழி ஏற்பட்டதே என்ற மகிழ்ச்சியைவிட அவ்வூராருக்கு நன்மை ஏற்படப் போகிறதே என்ற ஆனந்தமே அதிகம் ஏற்பட்டது. எனவே அவர் குந்தி தேவி கூறியதற்குச் சம்மதம் அளித்தார்.

அப்போது வீட்டில் பீமன் மட்டுமே இருந்தான். மற்ற நான்கு பாண்டவர்களும் ஊருக்குள் 'பிக்ஷை' வாங்கப் போயிருந்தார்கள். குந்தி தேவி பீமனிடம் பகாசுரனைப் பற்றிக் கூறி "அந்தணருக்கு உதவ நான் உன்னை அந்த ராட்சஸனிடம் அனுப்புவதாகக் கூறிவிட்டு வந்தேன். நீ போய் அவனைக் கொன்று இந்த அந்தணர் குடும்பத்திற்கும் இந்த ஊருக்கும் நன்மை செய்" என்றாள்.

பிக்ஷைக்குப் போன நான்கு பாண்டவர்களும் வீட்டிற்கு வந்தார்கள். பீமன் ஒரே மகிழ்ச்சியுடன் இருப்பதைக் கண்ட தருமர் தன் தாயிடம் அதன் காரணத்தைக் கேட்டார். குந்தி தேவியும் யாவற்றையும் விவரமாகக் கூறி "நமக்கு இந்த அந்தணர் செய்த உதவிக்கு பதிலுபகாரம் செய்ய இப்போது நமக்கு அரிய வாய்ப்பு கிடைத்துள்ளது" என்றாள்.



அதைக் கேட்ட தருமர் வருத்தப்பட்டவாறே "என்னம்மா இது! பீமனின் பலத்தை நம்பித்தானே நாம் மீண்டும் நாட்டைப் பெறுவோம் என்ற நம்பிக்கையில் இருக்கிறோம். அவனை ராட்சஸனிடம் அனுப்புவதாகக் கூறுகிறாயே" என்று கூறிக் கவலைப்பட்டார்.

குந்தி தேவியும் "பீமனை யாராலும் வெல்ல முடியாது. அவன் பகாசுரனைக் கொன்று இவ்வூருக்கே நன்மை செய்யப் போகிறான். அவனது வலிமை பற்றி நீ சற்றும் சந்தேகப்பட வேண்டாம். பீமன் கௌரவர்களிடமிருந்து நம்மைக் காக்கவில்லையா? அரக்கு மாளிகையிலிருந்து நம்மை எல்லாம் காப்பாற்றித்

தூக்கி வரவில்லையா? மகா பலசாலியான இடும்பனைக் கொல்லவில்லையா? எனவே நீ கொஞ்சமும் கவலைப்பட வேண்டாம். பீமன் வெற்றியுடனேயே திரும்பி வருவான்" என்றான்.

தருமரும் அதுகேட்டு மனம் தேறினார். பீமனும் அந்த வீட்டு அந்தணரிடம் சென்று "ஐயா! நீங்கள் ராட்சஸனுக்கு உணவு சமைக்கும் போது எனக்கும் சேர்த்து தயாரியுங்கள். காலையில் உண்டுவிட்டுக் கிளம்பினால் உற்சாகத்துடன் ராட்சஸனுடன் போர் புரிய முடியும்" என்றான். அந்தணரும் அவ்விதமே உணவு தயாரித்து பீமனுக்கு அளிக்க அவனும் அதை ருசித்து உண்டான்.

அதன் பிறகு அவன் வண்டியில் உணவுப் பொருள்களை ஏற்றி மாடுகளைப் பூட்டினான். அதனை ஓட்டிக் கொண்டு அவன் பகாசுரன் வசிக்கும் பகுதிக்கு சென்றான். அங்கிருந்த ஆற்றின் கரையில் வண்டியை நிறுத்தி பகாசுரன் எங்கிருக்கிறான் என்று பார்த்தான். பகாசுரன் சற்று தூரத்திலுள்ள குன்றின் உச்சி மீது நின்று கொண்டிருப்பதை பீமன் கண்டான்.

பீமன் அவனைத் தன்னருகே வரும்படி உரக்கக் கூவினான். அவன் வருவதற்குள் வண்டியிலுள்ள உணவுப் பொருள்களை பீமன் எடுத்துத் தின்னலானான். தன்னை ஒரு மனிதன் கூப்பிடுவதையும் தனக்கு வந்த உணவை எடுத்து அவன் உண்டு கொண்டிருப்பதையும் கண்டு பகாசுரன் ஆத்திரம் அடைந்தான்.



அவன் பீமனருகே வந்து நின்று "அடே யார் நீ? எனக்கு வந்த உணவை நீ சாப்பிடுகிறாயே? என்னைப் பற்றிய பயம் உனக்கு இல்லையா?" என்று கேட்டான். பீமனோ அவனை ஒரு முறை அலட்சியமாகப் பார்த்து விட்டு உணவை உண்பதிலேயே கண்ணும் கருத்துமாக இருந்தான்.



பகாசுரனுக்குக் கோபம் வந்தது. அவன் தன் இரு கைகளாலும் பீமன் முதுகில் பலமாகக் குத்தினான். பீமன் அதையும் பொருட்படுத்தாமல் மீதமிருந்த உணவைச் சாப்பிட்டு முடித்தான். அதன்பின் எழுந்து ஆற்றிற்கு போய் கை அலம்பிக் கொண்டு மெதுவாகத் திரும்பி வந்தான்.

இதற்குள் பகாசுரன் ஒரு மரத்தைப் பிடுங்கி எடுத்து பீமன் மீது விட்டெறிந்தான். பீமன் அதைத் தன் கையால் பிடித்துத் தூக்கி எறிந்தான். இப்படியே பகாசுரன் பிடுங்கி எறிந்த பல மரங்களை அவன் பிடித்துத் தூர எறியவே பகாசுரனின் கோபம் அதிகரித்தது. அவன் ஓடி வந்து பீமனைத் தன் இரு கைகளாலும் இறுகப் பிடித்தான். பீமன் அவனது பிடிப்பிலிருந்து திமிறித் தன்னை விடுவித்துக் கொண்டு பகாசுரனை ஓங்கிக் குத்தினான். இப்படியாக அவர்களிடையே குத்துச் சண்டை நடந்தது. பீமன் பகாசுரனைப் பந்துபோலத் தூக்கி எறிந்தான். தரைமீது விழுந்த அவனை இழுத்துப் போய் ஓரிடத்தில் கிடத்தி பீமன் அவனது மார்பின் மீது ஏறி உட்கார்ந்து தன் கைகளால் பல குத்துகள் விட்டான். கழுத்திலும் முகத்திலும் அக்குத்துகள் விழுந்து பகாசுரனைத் திக்குமுக்காடச் செய்தன. முடிவில் ரத்தம் கக்கி மூச்சுத் திணறி பகாசுரன் இறந்து போனான்.

பகாசுரன் இறந்ததைக் கண்டு அவனது உறவின் ராட்சஸர்கள் பீமனைத் தாக்க வந்தார்கள். பீமன் அவர்களிடம் "மரியாதையாக இப்பகுதியை விட்டு வெகு தூரம் போய் விடுங்கள். இல்லாவிட்டால் பகனுக்கு ஏற்பட்ட கதிதான் உங்களுக்கும் ஏற்படும்" என்றான். அவர்கள் பகனின் நிலையையும் பீமனது வலிமையையும் கண்டு பயந்து ஓடி

விட்டார்கள்.

பீமன் பகாசுரனின் உடலை இழுத்துப் போய் ஏகசக்கரபுரத் தலைவாசலில் போட்டுவிட்டு ஆற்றில் நன்கு குளித்துவிட்டு வீட்டிற்குப் போய் தருமரிடம் நடந்ததைக் கூறினான். இதற்குள் ஊரார் தலைவாசலில் கிடக்கும் பகாசுரனின் உயிரற்ற உடலைக் கண்டனர். அச்செய்தி ஊர் முழுவதும் பரவியது. ஆனால் பகாசுரனைக் கொன்றவன் யார் என்பது அவர்களுக்குத் தெரியவில்லை.

அன்று பகனுக்கு யார் உணவு அனுப்பியது என்பதை விசாரித்து அவர்கள் அந்த அந்தணரின் வீட்டை அடைந்தார்கள். அவர்கள் கேட்ட கேள்விகளுக்கெல்லாம் பதிலாக அவர் "நேற்றிரவு ஒரு யோகி வந்தார். அவர் தானே பகாசுரனுக்கு உணவு எடுத்துச் செல்வதாயும் தன்னை பகாசுரனால் எதுவும் செய்ய முடியாது என்றும் கூறினார். அவர்தான் இந்தப் புண்ணிய கைங்கரியத்தைச் செய்திருக்க வேண்டும்" என்றார். அவர் தம் வீட்டில் ரகசியமாக இருந்து வருபவர்களைப் பற்றிக் கூற விரும்பவில்லை.

பகாசுரன் இறந்தான் என மகிழ்ந்து ஊரார் விழாக் கோலம் பூண்டனர். அதில் பாண்டவர்களும் கலந்து கொண்டார்கள். அவர்கள் தாம் இன்னாரெனக் காட்டிக் கொள்ளாமலேயே தொடர்ந்து அங்கேயே இருந்து வரலானார்கள்.

ஒரு நாள் அந்த அந்தணர் வீட்டிற்கு ஒரு பயணி வந்தார். அவர் பல நாடுகளில் சுற்றி அலைந்து வந்தவர். அவர் பாஞ்சால மன்னன் துருபதனையும் அவனுக்கு திருஷ்டத்யும்னன், சிகண்டி, துரௌபதி ஆகியோர் பிறந்த வரலாற்றையும் கூறி துரௌபதிக்குச் சுயம்வரம் நடக்கப் போவதாகவும் தெரிவித்தார். அதுபற்றி விவரமாகக் கூறுமாறு குந்தி தேவியும் பாண்டவர்களும் வேண்டவே அவரும் சொல்லலானார்.



# ஒத்துழையாமை

மாயனூரில் வாழும் மாதவன் கரூரிலுள்ள கண்ணப்பனைக் காண வந்தான். அவன் தன் நண்பனுக்கு இரண்டு படங்களைப் பரிசாக அளித்தான். அவற்றைக் கண்ணப்பன் ஆணி அடித்து சுவரில் மாட்ட நினைத்தான். அதனால் தன் மகனிடம் "நீ போய் அடுத்த வீட்டிலிருந்து சுத்தி வாங்கி வா" என்று சொல்லி அனுப்பினான்.

சிறுவன் திரும்பி வந்து "அவர்களிடம் சுத்தி இல்லையாம்" என்றான். எனவே கண்ணப்பன் "சரி. எதிர் வீட்டிலிருந்து வாங்கி வா" என்று கூறி அவனை அனுப்பினான். சிறுவனும் திரும்பி வந்து "அவர்கள் வீட்டிலும் இல்லையாம்" என்றான். அப்போது கண்ணப்பன் "சரி. மூன்றாவது வீட்டிலிருந்து வாங்கி வா" என்று கூறி அனுப்பினான். சிறுவன் திரும்பி வந்து "அவர்கள் வீட்டிலும் இல்லையாம்" என்றான்.

அப்போது கண்ணப்பன் மாதவனிடம் "பார்த்தாயா! இந்த ஊரில் யாரும் எதற்கும் ஒத்துழைப்பதே இல்லை. வெறும் சுயநலக்காரர்கள். சரி, பையா! நம் வீட்டு சுத்தியை மரப் பெட்டியிலிருந்து எடுத்து வா. ஆணி அடித்துப் படத்தை மாட்டலாம்" என்றான்.

மாதவன் சிரமப்பட்டு வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டான்.



அம்புலிமாமா
அனுபந்தம் – 79

நம் நாட்டு
மரங்கள்:

# ஆலமரம்

நம் நாட்டில் ஆலமரம் இல்லாத ஊரே இல்லை என்று கூறலாம். இது மனிதர்களுக்கும் மிருகங்களுக்கும் பறவைகளுக்கும் நல்ல நிழலைத் தருகிறது. இதன் கிளைகளிலிருந்து வரும் விழுதுகள் வேர் போல பூமிக்குள் கூடச் செல்கின்றன. பாரசீக வளைகுடாப் பகுதியில் கரையோரத்திலுள்ள ஒரு பெரிய ஆலமரத்தின் கீழ் நம் நாட்டு வியாபாரிகள் தங்கி இளைப்பாறினார்களாம். இந்த வியாபாரிகளை பணியாக்கள் என்றதால் பாரசீக மொழியில் இம்மரத்திற்கு 'பனியன்' என்ற பெயர் கொடுக்கப் பட்டது. ஆங்கிலத்தில் இதை 'இண்டியன்ஃபின்' என்கிறார்கள்.

இம்மரத்தைப் பூசிப்பவர்களும் உண்டு. தன் கணவன் சத்தியவானின் உயிரைக் காக்க சாவித்திரி ஆலமரத்தைப் பூசித்தாள் என்றும் கூறுகிறார்கள். உலகமே வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட போது அந்த வெள்ளத்தில் மிதந்த ஒரு ஆலிலை மீதுதான் விஷ்ணுபகவான் சிறுவனாகப் படுத்து காட்சி அளித்தார் என பக்தர்கள் கருதுகிறார்கள். இப்போதும் 'ஆலிலை பாலகிருஷ்ணன்' படங்களைப் பல வீடுகளில் காணலாம்.

கல்கத்தாவினருகேயுள்ள சிப்பூர் பொடானிகல் கார்டனிலுள்ள ஆலமரமும், சென்னையில் அடையாறில் உள்ள ஆலமரமும், பீகாரில் கோவ்பூரில் குடை போல விரிந்திருக்கும் பெரிய ஆலமரமும் அதே மாநிலத்துக் காம்லோலில் மூன்று ஏக்கர் நிலத்தில் பரந்து வளர்ந்திருக்கும் ஆலமரமும் புகழ் பெற்றவை.

ஆலமரத்தின் இலைகள் பெரியதாயும் முட்டை வடிவில் வரிசையாய் கிளைகளில் முளைத்திருக்கும். பிப்ரவரி-மார்ச் மாதங்களில் இம்மரம் துளிர்விடும். துளிர்கள் வெளியே தென்படாது. சிறுசிறு காய்கள் ஜோடி ஜோடியாகக் காய்க்கும். இவை பழுத்தால் சிவப்பு நிறத்தில் இருக்கும். இவற்றைப் பறவைகள் மிகவும் விரும்பித் தின்கின்றன.



ஆலமரம் நூற்றுக் கணக்கான ஆண்டுகள் பட்டுப் போகாமல் இருக்கக் கூடியது.

நம்நாட்டு ரிஷி முனிவர்கள்-3

# நாரதர்



கடவுளையும் அவரது படைப்புகளையும் மிகவும் நேசித்தவர் நாரத மாமுனிவர். அவர் விஷ்ணு பக்தர். மஹதி என்ற தன் வீணையை மீட்டியவாறே அவர் 'நாராயணா' 'நாராயணா' என ஜெபித்தவாறே உலகம் முழுவதும் சுற்றி வந்து கொண்டிருந்தார்.

மனிதர் நலனை விரும்புபவர்களில் முதலவதாக நிற்பவர் நாரதர். தான் கற்றதைத் தகுதி பெற்றவர்களுக்கு போதித்தும் வந்தார். 'நாராயணா' எனக் கூறி உலகில் யாவருக்கும் உதவி வந்தார். மனிதர்களில் மிக உயர்ந்தவர் யாரென வால்மீகி முனிவர் அவரிடம் கேட்டபோது நாரதர் அவரிடம் ஸ்ரீ ராம பிரானைப் பற்றிக் கூறினார். அதைக் கேட்டுவிட்டே வால்மீகி முனிவர் தமஸா நதிக்கரையில் அமர்ந்து இராமாயணத்தை எழுதினார்.

பாண்டவர்கள் ஒரு புதிய நகரை நிர்மாணிக்க விரும்பியபோது நாரதர் தாம் பார்த்த இந்திரபுரி, குபேரபுரி ஆகியவற்றை வர்ணித்து அவர்களது மனக் கண் முன் அவற்றைக் கொண்டு வந்து நிறுத்தினார். அவற்றை எல்லாம் கண்ட பிறகே பாண்டவர்கள் இந்திரப் பிரஸ்தத்தை நிர்மாணித்தார்கள்.

நாரதர் கலகப்பிரியர் என்று பலர் கூறுவது வீண் அபவாதமே. அவரது செயல் கலகம் மூட்டுவது போலத் தோன்றினாலும் முடிவில் நன்மையில் தான் போய் முடியும். அது உலக நன்மைக்கே இருக்கும். கிருஷ்ணர் எங்கு வளர்கிறார் என்ற ரகசியத்தைக் கம்ஸனிடம் கூறி அவனது முடிவை விரைவாக்கி அவனது கொடிய செயல்களிலிருந்து உலகைக் காப்பாற்றினார். இது கலகம் மூட்டுவது போலிருந்தும் உலகிற்கு நன்மை புரிந்த செயல்தானே!

ராவணன் இறக்கக்கூட நாரதரே ஒரு வகையில் காரணம் எனலாம். ஒருமுறை ராவணன் நாரதரிடம் ஓங்காரத்தின் பொருள் என்ன என்று கேட்டானாம். அதை அறிய ராவணனுக்குத் தகுதி இல்லை என்று எண்ணி நாரதர் அதைக் கூற மறுத்துவிட்டார். இராவணனுக்குக் கோபம் வந்து நாரதரின் நாக்கை அறுக்க எண்ணினான். அப்போது அவர் ராவணனின் பத்துத் தலைகளும் அறுந்து கீழே விழுந்து உருளும் என்று சபித்தார்.

நாரதரின் அறிவு மிக அதிகம். அவர் மகா விஷ்ணுவிடம் நமாயையின் பொருள் என்ன என்று கேட்டார். அவரும் "நாரதா! அதை நீ போகப் போகத் தெரிந்து கொள்வாய்" என்று கூறினார். ஒருநாள் பூவுலகில் ஒரு கிராமத்தருகே போய்க் கொண்டிருந்த போது பெருத்த மழை பிடித்துக் கொண்டது. அவர் மழையிலிருந்து தப்ப எதிரே தென்பட்ட ஒரு வீட்டின் கதவைத் தட்டினார்.

கதவை அழகிய பெண் ஒருத்தி திறந்தாள். நாரதர் அவளது அழகில் மயங்கினார். அப்பெண்ணின் தாயும் அவளை மணந்து கொள்ளும்படி வேண்டவே நாரதரும் அவளை மணந்து கொண்டார். அவர் அங்கேயே தங்கி பல குழந்தைகளின் தந்தையாகவும் ஆனார்.

இப்படியாக சம்சார சாகரத்தில் மூழ்கி இருந்தபோது அப்பகுதியில் வெள்ளம் வந்து அவர் வாழ்ந்த வீட்டையும் மனைவி மக்களையும் அடித்துக் கொண்டு போய் விட்டது. நாரதர் துக்க மேலிட்டால் அழுது புலம்பி நாராயணா! நாராயணா! என்று கதறினார். மகாவிஷ்ணுவும் "நாரதா! மூவுலகிலும் சுற்றிவரும் உனக்கு மனைவி மக்கள் என்றெல்லாம் எதற்கு?" என்று கேட்டார். அப்போதுதான் நாரதருக்கு மாயை என்பது என்ன என்று புரிந்தது.

சாவித்திரி மணக்கப் போகும் சத்தியவான் எப்போது இறப்பான் என அவளிடம் கூறி எச்சரித்தவரும் நாரதரே. அதனால்தான் சாவித்திரி எமனிடம் வாதாடி சத்தியவானின் உயிரை மீட்டுவர முடிந்தது.

இப்படிப் பல புராணக் கதைகளுக்கு ஆதாரமாக இருந்தவர் நாரதர். நமது பக்தி இலக்கியங்களில் நாரதரின் பக்தி சூத்திரங்கள் மிக உயரிய இடம் பெற்றவை.



# உங்களுக்குத் தெரியுமா?

1. உலகிலேயே மிக அதிக எண்ணெய் உற்பத்தி செய்யும் நாடு எது?
2. இந்திய ஷேக்ஸ்பியர் என்று எந்த நாடக ஆசிரியரைக் குறிப்பிடுகிறார்கள்?
3. கிரீன்லாந்து எந்நாட்டின் ஒரு பகுதி?
4. திபெத்தில் உற்பத்தியாகி இமயமலை வழியாகப் பாய்ந்து கங்கை நதியோடு சேர்ந்து கடலில் சேரும் நதி எது?
5. புல் வகையைச் சார்ந்த மிகப் பெரிய முட்செடி எது?
6. நம் நாட்டில் 'ஏழு தீவுகள் நகரம்' என்ற எந்த ஊரைக் குறிப்பிடுகிறார்கள்?
7. ரேடியோவைக் கண்டு பிடித்தவர் யார்?
8. 'ராம்சரித மானஸ்' என்ற நூலை எழுதியவர் யார்?
9. 'பொருளியலின் தந்தை' என யாரைக் குறிப்பிடுகிறார்கள்?
10. அக்பரை மணந்த ராஜபுத்திர இளவரசி யார்?
11. மலேரியாவை குணப்படுத்தும் 'கொய்னா' என்ற மருந்தை எந்த மரத்தின் பட்டையைக் கொண்டு தயாரிக்கிறார்கள்?
12. தென்னிந்திய நகரம் ஒன்றில் பிரிட்டிஷ் படையின் முக்கிய அலுவலகம் இருந்தது? அந்நகர் எது?
13. இந்தோனேஷியாவின் சுமத்ரா தீவிற்குள்ள மற்றொரு பெயர் என்ன?
14. கிரிக்கெட் டெஸ்ட் மேச்சில் கலந்து கொண்ட மிக அதிக வயதான ஆட்டக்காரர் யார்?
15. 1498ல் நன்னம்பிக்கை முனைவழியாக இந்தியாவிற்கு வழி கண்டு பிடித்தவர் யார்?
16. ராமாயணத்தில் லட்சுமணனின் மனைவியின் பெயர் என்ன?
17. பெர்லின் எந்த நதிக்கரை மீது அமைந்துள்ளது?
18. உலகின் முதல் ஆராய்ச்சியாளர் எகிப்தைச் சார்ந்தவர். அவர் பெயர் என்ன?

## விடைகள்

1. ரஷ்யா
2. காளிதாசர்
3. டென்மார்க்
4. பிரம்மபுத்திரா
5. மூங்கில்
6. பம்பாய்
7. மார்க்கோனி
8. துளசிதாசர்
9. ஆ[illegible]
10. ஜோதிபாய்
11. சிங்கோனா
12. பெங்களூர்
13. ஜாவாமைனர்
14. இங்கிலந்தின் டபிள்யு ரோட்ஸ் (52 வயது)
15. வாஸ்கோடகாமா
16. ஊர்மிளை
17. ஸ்ப்ரீ நதி
18. ஹென்னா



# கவலைப்படுவது ஏனோ?

நாணலூரில் வாழும் நஞ்சப்பன் மிகவும் நல்லவன். பிறருக்கு உதவி மகிழ்பவன். ஆனால் அவனது உதவியைப் பெற்றவர்களோ அவனை அவ்வளவாக மதிப்பது இல்லை. இது நஞ்சப்பனுக்கு வருத்தத்தை அளித்தது.

நஞ்சப்பனின் மனைவி பூங்கொடி. அவள் தன் கணவன் வருத்தப்பட்டுக் கொண்டு கவலையுடன் இருப்பதைக் கண்டு "பிறருக்கு உதவுவதால் உங்களுக்கு மகிழ்ச்சியைவிட மனவருத்தமே அதிகம் ஏற்படுவதாகத் தெரிகிறது. எனவே இனி பிறர் விஷயத்தில் தலையிடாமலே இருங்கள். அப்போது இப்படி வருத்தப்பட்டுக் கவலைப்பட வேண்டி இராது" என்று அவ்வப்போது கூறி வரலானாள்.

அடிமேல் அடிவைத்தால் அம்மியும் நகரும் என்பது போல நஞ்சப்பனும் தன் மனைவி கூறுவது போல இனி நடப்பது என்றும் தீர்மானித்தான். இச்சமயத்தில் அவனது வீட்டிற்கு எதிரே வசிக்கும் மருதப்பன் அவனிடம் வந்து "நான் என் வீட்டை விற்றுவிட்டுப் பட்டணத்தில் போய் இருக்க நினைக்கிறேன். அதனால் இந்த வீட்டை விற்றுக் கொடுக்க வேண்டும்" என்று வேண்டினான்.

நஞ்சப்பனோ "இனிமேல் நான் யாருடைய விஷயத்திலும் எவ்வித சம்பந்தமும் வைத்துக் கொள்வதில்லை என்று தீர்மானித்திருக்கிறேன். அதனால் இந்தப் பொறுப்பை வேறு யாரிடமாவது ஒப்படைத்துவிட்டுப் போ" என்றான்.

மருதப்பனோ சிரித்தவாறே "அதெல்லாம் எனக்குத் தெரியாது. வீட்டை யாருக்கு விற்கச் சொல்லி

-பாபநாசம் சாமா-



எனக்குக் கடிதம் கொடுத்து அனுப்பு கிறாயோ அவனுக்கே விற்பேன். வேறு யார் கேட்டாலும் விற்க மாட் டேன்" என்று கூறி விட்டுப் போய் விட்டான்.

இதற்குச் சில நாட்களுக்குப் பின் நஞ்சப்பனின் மைத்துனன் பழனி யப்பன் அவனைக் காண வந்தான். அவன் மருதப்பனின் வீடு விலைக்கு வருவது அறிந்து தன் அத்தானிடம் "நான் மருதப்பனின் வீட்டை வாங் கிக் கொண்டு இந்த ஊரிலேயே இருந்து விடுகிறேன். அதனால் என் அக்காவுக்கு நான் உதவியாகவும் இருக்க முடியும். நீங்கள் மருதப்ப னுக்குக் கடிதம் எழுதிக் கொடுங் கள். நான் போய் அவனைப் பார்த்து அந்த வீட்டை விலைக்கு வாங்கி விடுகிறேன்" என்றான்.

ஆனால் நஞ்சப்பனோ "நீயோ என் மனைவியின் தம்பி. நீ இந்த ஊருக்கே வந்து விடுவதாக இருந் தால் என் மூன்று பெரிய வீடு களில் ஏதாவது ஒன்றில் நீ இரு. நீ ஒன்றும் மருதப்பனின் வீட்டை வாங்க வேண்டாம். அதற்கு நான் ஒப்பவும் மாட்டேன்" என்று கூறிக் கடிதம் எழுதிக் கொடுக்க மறுத்து விட்டான்.

அதைக் கேட்ட பழனியப்பன் "நான் ஒன்றும் உன் தயவில் இந்த ஊருக்கு வந்து இருக்க மாட்டேன். இனி அந்தப் பேச்சிற்கே இட மில்லை" என்று கூறிக் கோபித்துக் கொண்டு போய்விட்டான்.

இதற்குச் சில நாட்களுக்குப் பிறகு வேலப்பன் என்பவன் நஞ்சப் பனிடம் வந்த "நான் குடி இருக் கும் வீட்டை உடனே காலி செய்யும் படி வீட்டுச் சொந்தக்காரன் கூறு கிறான். எனக்கு உடனடியாக ஒரு வீடு தேவை. நான் மருதப்பனின் வீட்டை விலைக்கு வாங்கிக் கொள் கிறேன். நீங்கள் வீட்டை எனக்கு விற்கச் சொல்லி மருதப்பனுக்கு ஒரு கடிதம் எழுதிக் கொடுங்கள்" என்றான்.

நஞ்சப்பன் அதுபற்றி யோசித் துப் பார்ப்பதாகக் கூறவே வேலப் பன் மறுநாள் வந்து பார்ப்பதாகக் கூறிவிட்டுச் சென்றான். இதற்குச்

சற்று நேரத்திற்குப் பின் வேலப்பனின் மனைவி முத்தம்மாள் வந்து பூங்கொடியைக் கண்டு "நீங்கள் பெரிய மனசு பண்ணி எதிர் வீட்டை நாங்கள் வாங்க உதவ வேண்டும். இதனால் எங்களைக் காப்பாற்றும் புண்ணியம் உங்களுக்குக் கிடைக்கும்" என்று வேண்டினாள்.



பூங்கொடியும் அவள் மீது இரக்கப்பட்டு தன் கணவனிடம் "நீங்கள் மருதப்பனுக்குக் கடிதம் எழுதி வேலப்பனிடம் கொடுங்கள். அவன் எதிர் வீட்டை விலைக்கு வாங்கிக் கொள்ளட்டும்" என்றாள். மனைவியின் வற்புறுத்தலின் பேரில் நஞ்சப்பன் மருப்பனுக்குக் கடிதம் எழுதி வேலப்பனிடம் கொடுத்தான். வேலப்பன் கடிதம் வாங்கிக் கொண்டு போனான். அதற்குப் பின் அவன் நஞ்சப்பனைக் காண வரவில்லை.

வீட்டை வாங்கி இருந்தால் வேலப்பன் அதைத் தெரிவிக்க வருவான் என நஞ்சப்பன் எதிர்பார்த்தான். ஆனால் நாட்கள் ஓடிக் கொண்டிருந்தன. வேலப்பன் வீட்டை வாங்கி விட்டதாக ஊரார் பேசிக் கொண்டு அதற்கு உதவிய நஞ்சப்பனையும் அவர்கள் பாராட்டினார்கள்.

நஞ்சப்பன் அதுபற்றி விவரம் அறிய ஆவல் கொண்டு ஒரு நாள் வேலப்பனையும் அவன் குடும்பத்தினரையும் தன் வீட்டில் சாப்பிட அழைத்தான். வேலப்பனும் தன் குடும்பத்தினரோடு நஞ்சப்பனின் வீட்டிற்குப் போய் மூக்கு பிடிக்க விருந்துசாப்பாட்டைச் சாப்பிட்டானேயொழிய மருதப்பனின் வீட்டைத் தான் வாங்கினானா அல்லது இல்லையா என்று மூச்சுக் கூட விடவில்லை.

வேலப்பன் மருதப்பனின் வீட்டை உண்மையிலேயே விலைக்கு வாங்கித்தான் விட்டான். அவன் புதுமனை புக ஒரு நன்னாளையும் தேர்ந்தெடுத்து அதில் கலந்து கொள்ள எல்லோருக்கும் அழைப்பு விடுத்தான். ஆனால் நஞ்சப்பனையோ அவன் குடும்பத்தினரையோ வேலப்பன் அழைக்கவில்லை.



தன் கணவன் மனம் வருந்துவதைக் கண்ட பூங்கொடி "இம்முறை நான்தான் தவறு செய்துவிட்டேன். நமது நல்ல குணத்திற்குக் கிடைத்த தண்டனை இது. நாம் ஏமாளிகள். இந்த நிலையை எப்படிச் சமாளிப்பது என்று புரியவில்லை. என் தம்பி பழனியப்பனை வரவழைக்கிறேன். நம் கஷ்டத்தைக் கூறினால் கண்டிப்பாக உதவ வருவான்" என்றாள்.

பழனியப்பனுக்குத் தகவல் கொடுக்கப்படவே அவனும் தன் குடும்பத்தோடு வந்தான். அவன் நஞ்சப்பனின் வீட்டிலேயே தங்கி வீட்டின் நிர்வாகம் முழுவதும் தானே ஏற்றுக் கொண்டான். ஒரு நாள் வேலப்பன் நஞ்சப்பன் வீட்டிற்கு வரவே பழனியப்பன் அவனை வாசலிலேயே நிறுத்தி "என்ன விஷயம்?" என்று கேட்டான்.

வேலப்பனும் "நாளை நான் புது மனை புகு விழா நடத்துகிறேன். அதற்கு நஞ்சப்பனை அழைக்க வந்தேன்" என்றான். பழனியப்பனும் "அவருக்கு உடம்பு சரியில்லை. நீ சொன்னதை நான் அவருக்குத் தெரிவிக்கிறேன். நீ போகலாம்" எனவே வேலப்பனும் போய் விட்டான்.

மறுநாள் வேலப்பனின் புது மனை புகு விழா ஆர்ப்பாட்டமாக நடந்தது. அதற்கு ஊரார் பலரும் வந்தனர். ஆனால் நஞ்சப்பனோ அவனது குடும்பத்தினரோ யாருமே அங்கு செல்லவில்லை. அது பற்றித்தான் புதுமனையில் பேச்சாக இருந்தது. வேலப்பனைக் குத்திப் பேசிக் கிண்டல் செய்தவாறே இருந்தார்கள்.

மறுநாள் பழனியப்பனை வழியில் சந்தித்த ஓரிருவர் "நேற்று ஏன் நஞ்சப்பன் வேலப்பனின் புது மனை புகு விழாவிற்கு வரவில்லை?" என்று கேட்கவே அவனும் "வேலப்பன் அவரை அழைக்கவில்லை" என்றான். அப்போது அவ்வழியே சென்று கொண்டிருந்த வேலப்பன் நின்று "பொய். நான் அழைக்க வந்த போது நீ தானே அவருக்கு உடம்பு சரி இல்லை என்றும் நீயே சொல்வ

தாகவும் கூறி என்னை அனுப்பி னாய்?" என்று கேட்டான்.

அப்போது பழனியப்பன் "நீ மட்டும் அவரது உண்மையான நண்பனாக இருந்திருந்தால் அவருக்கு உடம்பு சரி இல்லை என நான் சொன்னதும் நீ உள்ளே போய்ப் பார்த்திருப்பாய். நீ அவ்வாறு செய்யாததால் நீ அவரது நெருங்கிய நண்பனல்ல. அதனால்தான் உன் அழைப்பு பற்றி அவரிடம் கூற வில்லை" என்றான். வேலப்பனும் "அப்படியானால் நீயாவது விழாவிற்கு வந்திருக்கலாமே" எனவே பழனியப்பனும் "நீ நஞ்சப்பனைத் தானே அழைத்தாய். ஒரு மரியாதைக்கு கூட என்னை அழைக்க வில்லையே. அழையாத வீட்டில் நான் எப்படி நுழைவேன்" என்றான்.

வேலப்பன் பதில் பேச முடியாமல் தலை குனிந்து கொண்டு சென்றான். இதெல்லாம் நஞ்சப்பனுக்குத் தெரியவே அவன் பழனியப்பனிடம் "நீ ஏன் வேலப்பனிடம் கடுமையாகப் பேசினாய்? எனக்கு மிக வருத்தமாக உள்ளது" என்றான்.

பழனியப்பனும் "இப்படியெல்லாம் வருந்துவது சரியல்ல. வேலப்பன் உங்களுக்கு நண்பனும் அல்ல, விரோதியும் அல்ல. அவனது செயல் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? பார்த்தால் பேசுகிறோம். முடிந்தால் உதவுகிறோம். இதற்கு மேல் அவனைப் போன்றவர்களைப் பற்றி எண்ணி மன வருத்தம் கொள்ளக் கூடாது. இதைத்தான் அறிவுள்ள எவனும் செய்வான். நானும் அதைத்தான் செய்தேன்" என்றான். அப்போது தான் நஞ்சப்பனுக்குத் தன் குறை என்ன என்பது தெரிந்தது.

பழனியப்பன் கூறியபடி மனதை நிலைப்படுத்திக் கொண்டால் தான் வீணாகக் கவலைப்பட வேண்டியதில்லை என்று எண்ணி அப்படியே அவன் இருந்து வரலானான்.





# கிணற்று மீன்கள்

காட்டு மிருகங்கள் ஒன்று கூடி ஒரு சிறு நிலப் பகுதியை விவசாயம் செய்யப் பண்படுத்தத் தீர்மானித்தன. அந்த வேலையில் நரியும் முயலும் சேர்ந்து கொண்டன. சற்று நேரத்திற்குள் முயல் மிகவும் களைத்துப் போயிற்று. உச்சி வேளை வெயில் கடுமையாகவே முயலின் உடலிலிருந்து வியர்வை கொட்டத் தொடங்கியது.

முயல் தன்னால் மேலும் வேலை செய்ய முடியாது என உணர்ந்தது. அதனால் அது தன் காலில் முள் குத்திவிட்டதாக நடித்து சற்று தூரம் தள்ளிப் போய் உட்கார்ந்தது. அதற்குச் சற்று நேரத்திற்குப் பின் அது யார் கண்ணிலும் படாமல் பதுங்கிப் பதுங்கிச் சென்று சற்று தூரத்திலுள்ள ஒரு தோட்டத்தின் கிணறை அடைந்தது.

அந்தக் கிணறைச் சுற்றி நிழல் தரும் மரங்கள் இருந்தன. கிணற்றில் ராட்டினம் மாட்டப்பட்டு அதில் கயிறும் இருந்தது. கயிற்றின் இரு முனைகளிலும் வாளிகள் கட்டப்பட்டிருந்தன. ஒரு வாளி கிணற்றுள் தொங்கிக் கொண்டிருந்தது. மற்ற வாளி கிணற்றின் கைப்பிடி சுவர் மீது இருந்தது.

யார் கண்ணிலும் படாமல் சற்று நேரம் ஓய்வு எடுக்க நினைத்த முயல் கிணற்றில் தொங்கும் வாளிக்குள் குதித்து உட்கார்ந்தது. ஆனால் அடுத்த விநாடியே வாளி கனம் அதிகமானதால் கிணற்றின் உள்ளே போய் நீர் மட்டத்தில் நின்றது. சுவர் மீதிருந்த வாளி கிணற்றின் மேல் பகுதியில் தொங்கிக் கொண்டிருந்தது.

வாளிக்குள் இருந்து கிணற்றின் நீர் மட்டத்தை அடைந்த முயல் கிணற்றிலிருந்து எப்படித் தப்புவது

-காரை குருமூர்த்தி-

என்று யோசிக்கலாயிற்று. அதற்கு ஒரு வழியும் அப்போது தென்படவில்லை.

முயல் முள் குத்தியதாகக் கூறிச் சற்று தூரம் போய் அமர்ந்ததுமே நரிக்கு சந்தேகம் ஏற்பட்டது. அதனால் அது அதைக் கண்காணிக்கலாயிற்று. வேலை செய்யாமல் ஓய்வெடுக்க முயல் திட்டம் போடுகிறது என்று அது ஊகித்துவிட்டது. எனவே யார் கண்ணிலும் படாமல் முயல் கிணற்றை நோக்கிப் போன போது அதைப் பின் தொடர்ந்தது.

முயல் வாளிக்குள் குதித்து கிணற்றினுள் செல்வதை அது பார்த்து விட்டது. எனவே அது கிணறருகே சென்று எட்டிப் பார்த்தது. நரியைக் கண்டதும் முயலுக்குத் தான் தப்பிப் போக ஒரு வழி தெரிந்துவிட்டது.

நரி முயலைப் பார்த்து "முயலே! இவ்வளவு நேரமாக அங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாய்? ஏதாவது தின்று கொண்டிருக்கிறாயா?" என்று கேட்டது. முயலும் "நரி மாமா! இங்கே மீன்கள் ஏராளமாக உள்ளன. நீயும் அந்த வாளியில் உட்கார்ந்து வா. இருவருமாகச் சேர்ந்து வயிறு புடைக்க அவற்றைப் பிடித்துப் பிடித்துத் தின்னலாம்" என்றது.

மீன் கிடைக்கிறதே என்ற ஆசையில் ராட்டினத்தில் தொங்கி கிணற்றின் மேல் பகுதியிலிருந்த வாளிக்குள் நரி குதித்தது. மறு விநாடி அந்த வாளி வேகமாக நீர்மட்டத்தில் போய் நின்றது. முயல் இருந்த வாளி கிணற்றின் மேல் பகுதிக்கு வந்தது. முயல் சட்டென வாளியிலிருந்து தரைமீது குதித்தது. பிறகு அது கிணற்றின் சுவர்ப் பக்கம் வந்து எட்டிப் பார்த்து "நரி மாமா! வேண்டிய அளவிற்கு மீன்களைப் பிடித்து சாப்பிட்டுவிட்டு மெதுவாக வந்து சேருங்கள். நான் போகிறேன்" என்று கூறிவிட்டு ஓடியது.



Say "Hello" to text books and friends
'Cause School days are here again
Have a great year and all the best
From Wobbit, Coon and the rest!



# போட்டோ வாக்கியப் போட்டி : : பரிசு ரூ.100

**இந்தப் போட்டியின் வெற்றி பெற்ற தலைப்புகள் 1995 ஆகஸ்ட் மாத இதழில் வெளியிடப்படும்**



Mahantesh C. Morabad



Mahantesh C. Morabad

★ தலைப்புகள் ஒரு வார்த்தையிலிருந்து நாலைந்து வார்த்தைகளுள் இருக்கலாம். இரு தலைப்புகளுக்கும் தொடர்பு இருக்க வேண்டும் ★ ஜூன் 20-ம் தேதிக்குள் போட்டிக்கான தலைப்புகள் எமக்கு வந்து சேர வேண்டும்.

★ எம்மிடம் வந்து சேர்ந்த தலைப்புகளில் நாம் சிறந்ததாகக் கருதும் தலைப்புகளுக்கு ரூ.100/- பரிசு. இது இரு தலைப்புகளுக்கும் சேர்ந்ததே. ★ தலைப்புகளை தபால் கார்டில் மட்டுமே எழுதி கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும்.

**'அம்புலிமாமா, போட்டோ வாக்கியப் போட்டி' சென்னை - 600026**

---

## ஏப்ரல் மாதப் போட்டி முடிவு

முதலாவது போட்டோ : **கழுகுக்கு விருந்தளிக்கும் மலை**
இரண்டாவது போட்டோ : **கண்ணுக்கு விருந்தளிக்கும் கலை**
பரிசு பெற்றவர் : **எஸ். தெய்வ வள்ளி, கல்கத்தா-34.**




Printed by B.V. REDDI at Prasad Process Private Ltd., 188 N.S.K. Salai, Madras 600 026 (India) and Published by B. VISHWANATHA REDDI on behalf of CHANDAMAMA PUBLICATIONS, Chandamama Buildings, Vadapalani, Madras 600 026 (India). Controlling Editor: NAGI REDDI.


CHANDAMAMA
அம்புலிமாமா

# என்ன அதிசயம்!

மகிழ்ச்சியான மாலை நேரம் ராஜு பள்ளியிலிருந்து வீட்டிற்கு வந்து கொண்டிருந்தான்.
திடீரென்று பலமான காற்று வீசத் தொடங்கியது. ஆகாயத்திலிருந்து பறந்து வந்த ஒரு பறக்கும் தட்டு ராஜுவின் முன்னால் வந்து நின்றது.

ஒரு குள்ளமான உருவம் அதிலிருந்து வெளிப்பட்டு ராஜுவிடம் பேசத் தொடங்கியது

"என்னுடைய சிநேகிதனாக இருப்பியா?"

"அ அ ஆனா நீ யாரு?"

"செவ்வாய கிரகத்திலிருந்து வந்திருக்கேன் இங்கே சிநேகம் செய்ய."

நடந்தது என்ன என்றறியும் முன்பே ராஜு சம்மதித்து விட்டான்

"சரி"

"அப்படின்னா, நம்ம சிநேகிதத்தின் அடையாளமா இதை எடுத்துக்க. இது எனக்கு ரொம்ப பிடிச்சது உங்க பூலோகத்தின் அதிசயம்"

"அதிசயம"

"நிச்சயமா! கொட்டை இல்லாத, தோல இல்லாத, மாம்பழத்தின் ருசி"

"மாம்பழமா? இந்த குளிர்காலத்திலா? சீக்கிரம் கொடு"

"சரி... வாயைத் திற, கண்ணை இறுக்கமா மூடிக்க, எனக்கு பிடிச்ச மேங்கோ பைட்டை சாப்பிடு"

"ஆ... மேங்கோ பைட்"

ராஜுவின் மகிழ்ச்சிக்கு எல்லையில்லை. அவனுக்குப் பிடித்தமான மேங்கோபைட் செவ்வாய கிரகத்தின் விருப்பமாகவும் உள்ளது













பார்லே
மேங்கோ
பைட்